# பதிப்புரை

★

**யோக** சமாஜத்தின் புனித வெளியீடு சுத்த சக்தி உபாசனை; இது சுத்தானந்தரின் வழிபாட்டு நூல்; அவருக்கு யோக சித்தியளித்த ஆவேச நூல்.

சுத்தமே கடவுள்; அதன் விளக்கமே சக்தி; இரண்டும் சூரியனும் கதிர்களும் போன்றவை. "**ஓம் சுத்த சக்தி**" என்பது சிறந்த மந்திரம். இது சுத்த பரமாத்ம சக்தி உபாஸனைக்கு ஏற்றது. **அமர்ந்த கடவுள் சுத்தம்; ஆடும் கடவுள் சக்தி;** அது சத்து; இது சித்து; இரண்டின் ஆனந்த லீலையே உயிருலக வாழ்வாகும். ஆக்கல், அளித்தல், அழித்தல், அடக்கல், அருளல் ஆகிய ஐந்து அகர நிலைகளும் சுத்த சக்தி விளையாடலாகும். பிரம சக்தியான **வாணி**, விஷ்ணு சக்தியான **திருமகள்**, ருத்ர சக்தியான **காளி**, மகேச சக்தியான **மகேசுவரி**, சதாசிவ சக்தியான **மனோன்மணி** எல்லாம் .... சுத்த பரமாத்ம சக்தி விளக்கமே.

இதில் பல வேதாகம யோக சாதன ரகசியங்களும் தியானப் பாடல்களும் அடங்கியுள்ளன. இதன்படி உபாசனை செய்யும் தூய நல்லன்பர் அருளும், பொருளும், அன்பும், அறிவும், ஆயுளும், ஆற்றலும் பொலிய இன்புற்று வாழ்வார்கள்.

சுத்த சக்தி உபாசனை மனித சமுதாயத்தைப் புனிதமாக்கி, வீறுபடுத்தி, வெற்றி தருக. ஓம் சுத்த சக்தி!

சார்வரி, சித்திரை, 31.
சென்னை — 20.

**யோக சமாஜம்.**

ஓம் சுத்த சக்தி

# சுத்த சக்தி உபாசனை

## 1. சுத்த சக்தி விளக்கம்

சுத்த பரமாத்ம சகதியே எங்கும், எதுவும் எல்லாம். அதன் அருளாடலே ஆருயிர் உலகம். அசுத்த சக்திகளான ஆசையாணவ மாசுகளால் அல்லலுறும் உலகம், சுத்த சக்தி உபாசனையாலே தூயநல்லின்புறும். இந்த மந்திரம் என்னுள் எழுந்து என் வாழ்வை முன்னேற நடத்தியது. — ஓம் சுத்த சக்தி — இம் மந்திர சக்தியே எனக்கு யோகசித்தி யளித்தது. இது எல்லா உலகிற்கும் பொதுமந்திரம். இடர்ப்படும் மானிடத்தை மாசறுத்துத்தேசுறுத்தி, வீறு பெற்ற சக்திக் கனலாக்கும் யோக சித்தியைத் தருவது ஓம் சுத்த சக்தி மந்திரம். வான், வெளி, வளி, தீ, நீர், மண், கதிர், கடல், மழை, பயிர், உடல், உயிர், உணர்வுத் தொகுதி எல்லாம் சுத்த சக்தி விளக்கமேயாம். சுத்த சக்தியின்

சச்சிதானந்தக் கூத்தே உலகாடலாகும். உலகம் சுத்த சக்தி சைதன்ய லீலை. அதுவே விராட் ஸ்வரூபம்; அதுவே ஹிரண்யகர்ப்பம்; அதுவே அந்தர்யாமியான பிராக்ஞன்; அதுவே வியஷ்டி, சமஷ்டி, தனி, தொகுப்பு. உடலில் கட்டுண்டது ஜீவாத்மா; அதில் சுத்த பரமாத்ம சக்தி சுதந்திர மாக விளங்குகிறது. கைதி சிறையிலிருக்கிறான்; அவனைக் காக்கும் காவலனும் சிறையுட் புகுவான், வருவான்; ஆனால் அவன் கைதியன்று. அது போலவே சுத்த பரமாத்ம சக்தி, உயிருடலில் கட்டில்லாமல் விளையாடுகிறது. அதுவே விழிப்பில் உலகம், கனவில் மனக்காட்சி, சுழுத்தியில் மறதி, தியானத்தில் உணர்வு, துரியத்தில் அறிவு, மகாதுரியத்தில் தூய பேரின்பமாக விளங்குகிறது. அதுவே அன்பருள் அன்பு, அறிஞருள் அறிவு, இன்பருள் இன்பு, இறைவருள் இறைமை, புலவருட் புலமை, யோகியுட் சக்தி.

## 2. மஹா குண்டலிக் கனல்

உடல் சவம்; கடவுள் சிவம்; இரண்டிலும் கலந்துறையும் சீவன், சுத்த சக்தி சைதன்ய வடிவம். சுத்த சக்தியே, ஆக்கும் அயன், காக்கும் மால், அழிக்கும் உருத்திரன், அடக்கும் மகேசன், அருளும் சதாசிவன், அமைதியான சாட்சியாக அமரும் சுத்த சிவன். சுத்த பரமாத்ம சக்தி, ஐந்து தொழில் புரிந்தும், அதற்கும் அப்பாற்பட்டது. அது தூய அரு, மாசற்ற சாட்சி,

காண்பான். அதுவே ஆணில் ஆண்மை, பெண்ணிற் பெண்மை. உடலும் உலகும் மாறும் மறையும்; சுத்த பரமாத்ம சக்தி என்றும் இயல்பு திரியாதிருக்கும். அதுவே அறிவும் தெளிவும் கலையும் கல்வியும் நல்கி நம்மைப் பக்குவப் படுத்தும் கலைமகள்; அதுவே அழகும், திருவும் செல்வமும், சீரும் சிறப்பும் நல்கி வாழ்வை இன்பக்கவிதை யாக்கும் திருமகள்; அதுவே உக்கிர வேகத்தால் தட்டுத் தடைகளை முட்டி யெறிந்து, விடுதலை நல்கும் மகாகாளி. அதுவே அமைதியும், அடக்கமும், உபசாந்த நிலையும் தந்து தியானத்தை நிலைநாட்டும் மகேசுவரி. அதுவே மாசற்ற இன்பமும் அகமகிழ்வும் தெய்வப் பொலிவும் அருளும் மனோன்மணி; அதுவே யோக சித்தி நல்கி, மானிடத்தில் தெய்வத் தன்மையை விளக்கும் சுத்த பராசக்திக் கனலாகும். அதுவே மூலாதாரத்தில் குண்டலிக் கனல்; அதுவே ஸஹஸ்ராரத்தில் மஹாசுத்த குண்டலிக் கொழுந்து.

## 3. சுத்த சக்தி சாதனம்

சுத்த சக்தி சாதனத்தால் மஹாகுண்டலி சித்திக்கும். சரியை, கிரியை, யோகம், ஞானம் இந்த நான்கும் அதன் முதற் படிகள். மஹாதுரிய சமாதி இரண்டாம் படி. சுத்த ஜோதி லயம் மூன்றாவது படி. சுத்த சக்தி மயம் நான்காவது படி. சுத்தானந்த தத்பரம்

ஐந்தாவது படியாகும். ஆணவம், மாயை, கன்மம் ஆகிய அழுக்கேறிய சகலாத்மா, சுத்த பரமாத்ம சக்தியைச் சரண் புகுந்து,
பிரளயாகலன், விஞ்ஞான
விஞ்ஞானகலன் ஆனந்தனாகி,
தன்மயனாக விளங்க வேண்டும்.
இயமம, நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி (நன்னெறி, தூய வாழ்வு, நல்லிருக்கை, உயிர்ப்பமைதி, அடக்கம், ஒடுக்கம் உன்னம், (தியானம்) ஒருமை, ஆகிய எட்டும் யோக சாதனங்களாகும். சரியை, கிரியை, யோகம், ஞானம் (ஒழுக்கம், வணக்கம், ஒருமை, அறிவு) இவை சித்தாந்த சாதனங்களாம். சிரவணம், மனனம், நிதித்தியாஸம், நித்தியாநித்திய விவேக விசாரம், சமம், தமம், திதீட்சை, உபரதி, இம்மை அம்மைப் பயன் விழையாமை, முமுட்சுத்துவம் ஆகிய பத்தும் வேதாந்தப் படிகளாம். இவை யெல்லாம் சுத்த சக்தி சாதனத்தால் எளிதாக வரும். இருட்டறையில் குருட்டுக் கிழவனைப் போலத் தவிக்கும் ஜீவான்மாவை, சுத்த பரமாத்ம சக்தி அன்பு காட்டி, அருளூட்டி, இளமையாக்கி, கண்ணைத் திறந்து, கருணை விளக்கி, உண்மைக்கு நடத்து கிறது. அறியாமையில் களிம்பேறிக் கிடக்கும் ஆன்மாவை, சுத்த சக்தி மாசறுத்து மாற்றேற்றி, மெருகேற்றிப் பத்தரை மாற்றுத் தங்கமாகப் பொலியச் செய்கிறது. ஊனத்தில் மயங்கிய

ஆன்மாவைத் தியானத்தில் நாட்டி, தியான மலர் ஞானக்கனியாகச் செய்கிறது. அழிமுனையில் அலையும் ஆன்மா, சுழிமுனையில் அடங்கச் செய்கிறது. சிறிய இன்பத்தில் மயங்கி வருந்தும் சீவனுக்கு, சுத்த சக்தி பெரிய நிலையின்பம் அளிக்கும். இரவு பகலில் வட்டமிட்டலையும் உயிருக்கு, என்றும் நின்று ஒளிரும் நித்திய ஜோதியை விளக்கும். சுத்த சக்தி சாதனம் அளவற்ற இன்ப நலமாகும்.

## 4. மந்திர விளக்கம்

சுத்த சக்தி என்பதன் உட்பொருளைக் காண்போம். ஒரு காலம் பரமாத்மனிடம் வரம் பெறுவதற்காக ரிஷிகளும் ரிஷிபத்தினிகளும் நீண்ட தவம்புரிந்தனர். பரமாத்மன் ரிஷிகளுக்கு த் என்றார். ரிஷிபத்தினிகளுக்கு க் என்றார். அதன் விளக்கம் கேட்டனர். முன்னே தேவர், அசுரர், மாந்தர் ஆகிய மூவரும் பிரம்மாவின் உபதேசத்தை நோக்கித் தவம் புரிந்தனர்; பிரம்மா, மூவருக்கும் த, த, த என்றே ஒலித்தார். அதன் பொருள் தேவருக்கு **தமத்வம்** வேண்டும், புலன் மனம் அடங்கிய யோகம் வேண்டும். அசுரருக்கு **தயத்வம்** பிறரிடம் இரக்கம் வேண்டும். மாந்தருக்கு **ததத்வம்** (ஈகை, தியாகம்) வேண்டும் என்பதாம். அதே மாதிரி பரமாத்மன் ஆண்களுக்கு த் என்றது சுத்தம், தயை, தருமம், தானம்,

தமனம், ஆத்ம தரிசனம், தனம் முதலிய தன்மை களைக் குறிக்கும். சுத்தம் என்பது சிவம், விஷ்ணு, பிரம்மா, கணபதி, புத்தன், அருகன், அகரன், யகோவா ஆகிய எல்லாத் தெய்வங்களையும் குறிப் பதாகும். த்த என்பது சித்தாந்தம், சித்தமாக பரமாத்ம சுகத்தை நல்குவதாகும். சுத்தம் மனோ வாக்கு காய சுத்தமாகும். கருணை, அன்பு, புலன டக்கம், தியானம் இவற்றால் மனத்தூய்மையுறும். தீமையில்லாத வாய்மை, இன்சொல், நாமஜபம், அருளிசை இவற்றால் மொழித்தூய்மை பெறலாம். அருட்பணி, நல்லுழைப்பு, உண்டுடுத்து வாழத் தொழிலியற்றல், ஈட்டிய பொருளைப் பகுத்துண் ணல், சமூக சேவை, பெரியார் தொண்டு இவற் றால் மெய்த்தூய்மை எய்தும். இந்த முத்தூய்மையால் அகப்புறத் தெளிவும் அமைதி யின்பமும் உண்டாகும், உள்ளம் திறக்கும், தியானம் நிலைக்கும். சுத்தாத்மப் பொலிவெய்தும். தெய்வத்தன்மை வளரும். ஆத்ம சக்தி விழித் தெழும், சுத்த சாதனத்தால் சக்தி மலரும். சு சுத்த யோகம்; த் சித்தி; த தானம், தயை, தருமம், தமம், தகராகாச ஞானம் என்பதாம்.

இனி, க் என்பது மூலாதாரத்தில் அழுத்தும் பக்குவ நாதம். க் என்பது கனல். குண்டலிக் கனல். தி என்பது பக்தி, முக்தி, புத்தி, சாந்தி ஆகிய நலங்களாம். ச என்பது சமம், சந்தோ ஷம், சாந்தம் என்பதாம். சக்தி என்பது உலக வாழ்வு வெற்றி பெறும் யோகக்கனலும், வீறும்,

ும் தருவதாம். சுத்தம் என்பது உள்ளு ணர்வும், தெய்வத் தெளிவும் தருவதாம். ஓம் என்பது அ-உ-ம் என்ற ஒலிகளின் தொகுப்பாம். அ-அவன், சிவன், இறைவன், ஆண்டவன், அல்லா, அகரன். அப்பன். அன்னை, அறம், அன்பு, அருள், அமைதி, அகமகிழ்வு முதலிய நலங்களைக் குறிப்பதாம். உ என்பது உள்ளம், உலகம், உண்மை, உவகை, உத்தம குணங்கள், உயர்தவ யோகம், உலகான்மா இவற்றைக் குறிப் பதாகும். ம் என்பது மனிதான்மா அறிவு மலர்ச்சி, மகிழ்ச்சி, மதமச்சரமின்மை இவற் றைக் குறிக்கும். ஓம் என்னும் பரமாத்மனை சுத்த யோகத்தால் உபாசித்து, சக்தி பெற்று, சுத்த பர மாத்ம சக்தியால் உலகாலயத்திற்கு அருட்பணி செய்து, ஆறு போல வாழ்ந்து, அறிவுக் கடலைக் கலந்து ஆனந்தமாதலைக் குறிக்கும் மஹா சுத்த யோக மந்திரமே ஓம் சுத்த சக்தி. வேத சாரம் காயத்திரி; அது ஓம் பரமாத்மனின் சுத்த சைதன்ய சக்தியைத் தியானித்து மேலோங்கத் தூண்டும். ஓம் சுத்த சக்தி என்பதே காயத்திரி யின் விளக்கமாகும்.

இந்த மந்திரத்துடன் பல பீஜாக்ஷரங்களைச் சேர்த்து உபாசிக்கலாம். பீஜாக்ஷர ரகசியமெல் லாம் குரு முகமாகவே அறியத்தகும்.

## 5. சுத்த சக்தி சஞ்சாரம்

சுத்த சக்தி ஊற்றெடுக்கும்போது நரம்புகளில் ஒரு நுட்பமான மின்சாரக்கனல் உணர்வாகும். அதையே உள்ளாரக் கவனித்துக்கொண்டிருந்தால், தியான மோன சமாதி கைகூடும். அது தீவிரமாக ஆக துரிய நிலையும், அது தீவிரமாக துரியாதீத நிலையும், மஹாதுரிய நிலையும், சுத்தானந்த சுயஞ்ஜோதி சைதன்ய நிலையும் சித்திக்கும். உள்ளனுபவங்கள் எல்லையற்றனவாகும். ஹட யோகம் தூல வீரிய தேகங்களை வளமாக்கி, நரம்புகளையும் சுரப்பிகளையும் செழிப்புறுத்தும். இராஜ யோகம் மனதை நிலைநாட்டி தர்ம மேக சமாதிநிலை கூட்டும். மந்திர யோகம் ஆதாரங்களை மலர்த்தும். தந்திர யோகம் பெண் சக்தியால் ஆண்மையின் வீறு பெற்ற ஆதாரங்களை மலர்த்தி, குண்டலியை எழுப்பி, ஸஹஸ்ராரத்தில் அதைச்சேர்க்கும். மூலாதாரத்தில் விழித்தெழுந்த குண்டலி, சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆஞ்ஞை, ஸஹஸ்ராரங்களுக்கு மேலும் அதி நுட்பமான சக்தி நிலையங்களில் பரவும். அவை கிரியா யோகங்களுக்கு எட்டாவாம்.

ஆஸனம், பிராணாயாமம், தியானம், சமாதி இந்த நான்குமே சாதனயோகங்களின் முதன்மையான பயிற்சி. இவை நாம் முயன்று செய்வனவாம். இவற்றின் பயன் சக்தி சஞ்சாரமே.

இடா, பிங்கலா, சுஷும்ணு ஆகிய மூன்று யோக நாடிகளைச் சார்ந்தே சக்திக்கனல் ஓடும். கிரியா யோகங்களில் "நான்" என்ற ஆணவ முனைப்பு இருக்கும்; "எனக்கு" என்ற ஆசையுமிருக்கும். எனது, யான், எனக்கு என்ற உணர்வை ஊனுக்கி, எல்லாம் இறைவனுக்கு என்ற தியாக வுணர்வு தழைத்தாலே திருவருள் இறங்கும்.

கர்ம யோகம், பக்தி யோகம், ஞான யோகம் இம்மூன்றும் அருட்சக்தியும் தெய்வத் தன்மையும் தரும். இவற்றின் அடிப்படை அடைக்கலம். உள்ளத்தும் உலகத்தும் நிலவும் சுத்த பரமாத்ம சக்திக்கே ஆளாகி, அதற்கே வேள்வியாக அருட் பணி செய்தல், ஆராதனை செய்தல் கர்ம யோகம். அதையே உள்ளக்கோவிலில் ஆவாகனம் செய்து உயிர்த்துடிப்பெல்லாம் அன்பு மலராக்கி வழிபடு தல் பக்தி யோகம். அதனுடன் அதுவாக உணர்ந்து கலந்து ஒன்றுதல் ஞான யோகம். இதற்கு மேல் அதே நினைவா யிருந்து உள்ளத் துடிப்பெல்லாம் சுத்தசக்தியாகி உணர்வாயிருத் தலே சுத்த சக்தி யோகமாகும். இதனுல் அந்தக் கரண சுத்தியும், ஆதார சுத்தியும், ஆத்ம சுத்தியும் எய்தி, மேலிருந்து "சுத்த சக்தி" உச்சியில் ஸஹஸ்ராரத்திற்கு மேல் உள்ள சுத்தாத்ம மண் டலத்தில் தாண்டவம் புரியவுணரலாம். இந்தத் தாண்டவம் எனக்கு எட்டு வயதில் திருவருளால் எழுந்தது; இன்றும் நடக்கிறது. இதுவே திரு வடி நடனம், சிதம்பர தாண்டவம், காளிங்க

நடனம். உன்மினி சமனிக்கு மேலுள்ள சிதாகாஸ சிற்சபையில் சுத்தபரமாத்மசக்தி இவ்வாறு தாண்டவமாடும் போதுதான், ஊனிடம் கொண்ட மானிடம், தேனிடங் கொண்ட ஞான நடம் புரியும் சுத்த சக்தி சைதன்ய நிலையமாகும். இதுதான் பிறவிப் பயன். இப்பயனைப் பெறும் உபாசனையே சுத்த சக்தி உபாசனை. இனி உபாசனையில் முனைவோம்.

## 1. சுத்த ஜோதி மாலை

இராகம் : சிந்து பைரவி] [தாளம் : திஸ்ர ஏகம்

இன்பவாரி தன்னிலே
 எழுந்தஜோதி என்னவே,
அன்புமிக்க சுத்தசக்தி
 அன்னைவாழ்க வாழ்கவே! (இன்)

குமுதமான செங்கணுள்,
 குளிர்ந்தபார்வை கொஞ்சிடும்,
அமுதமான புன்னகை
 அழகுசொட்டும் இந்திரை! (இன்)

தங்கமான மேனியாள்,
 சமதைகொண்ட நெஞ்சினுள்,
பொங்குமங்க லம்புரிந்து
 போற்றிடும் திருமகள்! (இன்)

அரக்கரின் கொழுப்பினை
 அடக்கிடும் பயங்கரி;
மறக்கருணை கொண்டசக்தி
 வல்லமை தருவளே! (இன்)

சுற்றிடும் பகைத்திரள்,
 சுருண்டுவீழப் போரினில்
வெற்றிநல்கும் பத்ரகாளி,
 வீரை, நீலி, சூலியே! (இன்)

ஜீவயாழிற் பேரின்பம்,
செழிக்கமெய் சிலிர்க்கவே,
காவியங்கள் மீட்டுகின்ற
கமலவாணி போற்றியே! (இன்)

வேந்தரும் வணங்கிடும்
விமலத்தாய் மகேஸ்வரி,
சாந்தமோங்க வாழ்விலே
நாட்டவே! (இன்)

## 2. ஓங்கார விளக்கு வணக்கம்

இராகம்: பியாகு] [தாளம்: திஸ்ர ஏகம்

ஓங்கார மண்டபத்தில் - ஒளிரும்
யோக மணிவிளக்கே,
தூங்காத நல்லொளியே - இதயத்திற்
சுடர்நகை புரிவாய்.

உச்சிக் கமலத்திலே - துலங்கும்
உண்மைச் சுடரொளியே,
அச்சத் துயர்ஒழிய - உலகில்
அபயக் கதிர்பரப்பாய்!

இமய வெண்பனிமேல் - சிவனுடன்
இலகுந் தீச்சுடரே,
அமர கங்கையைப்போல் - உன்சக்தி
ஆடித் தவழாதோ?

உபாசனை

நித்திய மோனத்திலே - அமைதியாய்
நீந்தும் தவச்சுடரே,
சத்திய வாழ்வுபெற - உனது
தங்கத் தணல் பரப்பாய் !

பூத வுடலினிலும் - தெய்வப்
புன்னகை பொங்கிடவே,
வேதப் பொருளருவி - எனவே
விம்மிப் புரண் டலைவாய் !

மானிட வாழ்க்கை யெல்லாம் - மெஞ்ஞான
மாறுதல் பெற்றிடவே
ஆனந்த கானமுடன் - உலகில்
ஆடிக் களித்திடுவாய் !

மனமயக்க மின்றி - சாதி
மதமயக்க மின்றி
வனமலர்களைப் போல் - உயிர்கள்
வாழ வகையருளாய் !



## 3. சுத்த சக்தி

இராகம் : பூபாளம் ] [ தாளம் : திரிபுடை

எழுந்திரு கல்யாணி ஓம்சுத்த சக்திஎம்
இதயத்தில் உபசாந்த உதயத்தைத் தூண்டி
அழுந்திருள் ஒழிந்திடச்
செழுஞ்சுடர் பொழிந் தெங்கள்
ஆதார கமலத்தின் மீதேறிப் பொலிந்திட
எழுந்திரு ஓம்வாணி எழுந்திரு ஓம்லக்ஷ்மி
எழுந்திரு ஓம்காளி குண்டலிக் கனலே
எழுந்திரு சாந்த மஹேஸ்வரி தாயே
இதய மனோன்மணி உதய சுந்தரியே !

விண்முகம் கனிந்தது விடிந்தது காலை
வீங்கிருள் அகன்றது தூங்கின குமுதம்
தண்முகம் அருணத் தணல்முக மானது
தடங்களில் விரிந்தன தாமரை யெல்லாம்
மண்முகம் புதுப்பசும் பொன்முக மாகிட
மங்கலச் செங்கதிர் மலர்ந்தது வானில்
எம்முகம் பார்த்தருள் புரிவதற் கெண்ணி
எழுந்தருள் இத்தினம் இன்பக்கொழுந்தே !

ஆர்வமெனும் சேவல் கூவுதுன் னருளை
அன்புளம் பாடுதுன் ஆடலின் பொருளைக்
கார்வரக் காணும் கலாபத்தைப் போலுன்
கருணை முகங்கண்டு களித்ததெங் கண்ணே!
சூரிய ஜோதிசேர் தாரகை போலுன்
சுடரினில் ஒன்ருகும் சுகநிலை யருளாய்
பாரெலாம் உன்முகம் பார்த்திட வருளாய்
பரமசி வானந்தம் பாலிக்குந் திருவே!

புள்ளினம் வண்டினம் பூமணத் தென்றல்
பூபாளம் பாடியே போற்றின உன்னை
துள்ளின கன்றினம் தாய்மடி யுண்டே
தொண்டருன் பெருமையைத் துதித்தனர்கூடி
விள்ளரும் ஆனந்தத் தேனமு தாறே
வேகமாய் வந்தான்மத் தாகந்தீர்த் தருளாய்,
உள்ளொளி தூண்டியெம்
உண்மையை யிலக்காய்,
ஓம்சுத்த பரமாத்ம சத்தியே வணக்கம்!

இருட்குலத் தீமைகள் இனறுடன ஒழிக
இடர்செயும் பகைக்குலம் இடமின்றி யழிக!
மருட்குல மாயங்கள் வாயிழந் தொழிக!
மனமயக் காகிய இனமயக் கொழிக,
பொருட்பெரு சுத்தான்மப் புதுயுகம் புலர்க
பொய்ச்சாதி மதவினை பூண்டுடன் மறைக
அருட்குல வீரர்கள் அன்புடன் பொலிக
அமரா னந்தம்பொழி அமுதலூற் றருளாய்!

பந்த வினையெல்லாம் சிந்திடப் புரிந்தே
பரம பரிசுத்த யோகப் பயனால்
சிந்தையில் உபசாந்த தீபத்தை யேற்றிச்
சீவ சைதன்யத்தைச் சிவமய மாக்கி
அந்தர தாரகை ஐக்கிய மாகும்
அருண கிரணம்போல் அறிவொளி வீசி
வந்தருள் ஆனந்தந் தந்தெமை யாளாய்
வாழி நின் வானருள் வாழியிவ் வுலகே!

## 4. சுத்த சக்தி தாண்டவம்

ஓங்குயர் மோனவெளி-அதனில்
ஓமென யாழிசைத்தாய்-அந்த
நீங்கறு பாட்டினிலே-பராசக்தி
நீயுலகைப் படைத்தாய்
ஈங்குயிர் யாவினுக்கும்-உயிராய்
எங்கும் இருப்பவளே-எம்மைத்
தாங்கி வளர்ப்பவளே-சுத்தசக்தி
தர்மச் சுடர்மணியே!

ஓடும் அருவியெலாம்-அம்மாஉன்

பாடும் பறவையெலாம்-திருப்
பாவை முழக்கு மன்றோ
கூடும் மணத்தென்றல்-கண்ணன்
குழலமுத மன்றோ
ஆடும் அவனியெல்லாம்-ஓம்சச்சி
தானந்தத் தாண்டவமே!

பொங்குங் கடலோசை-உன்னைப்
போற்றும் ஜயமுரசம்
செங்க திரின்எழுச்சி-நித்திய
தீப ஆராதனையாம்
திங்களுந் தாரகையும்-அணி
செய்யு மணிமாலை-அம்மா
பங்கயக் காடெல்லாம்-நீயெம்மைப்
பார்க்கும் பரவசமாம்-சுப
மங்கள வாழ்வினுக்கே-பராசக்தி
வான்மழை போன்றவளே !

காலை மலர்வனத்தில்-உனது
கட்டழகைக் கண்டோம்
சோலை யிளங்குயிலில்-உனது
தூயகுரல் கேட்டோம்
வேலைக் கடலினிலே-யோக
வேதாந்தச் சொல்லறிந்தோம்
மாலை யியற்கையிலே-அம்மா நின்
மாயம் விளங்குவதே !

முல்லை வனத்தினிலே-மோகன
முரளிக் காந்தத்திலே
அல்லலைப் போக்குகின்ற-கண்ணன்
ஆடல் அழகினிலே
அல்லி மலர்விழியால்-அம்மா நீ
அருளும் அன்பினிலே
சொல்லத் தெரியவில்லை-பேரின்பம்
சொக்கித் தழுவுதம்மா !

2—130

அச்ச மினியுண்டோ-ஆசை—
யாணவப் பேயுமுண்டோ
துச்ச நினைவும் உண்டோ-சுதந்திர—
ஜோதியைக் கண்டுவிட்டோம்
நச்சு மனமாயை-நலிய—
நாரணி சக்தியன்னை
முச்சுடர் வானத்திலே-பளிச்செனு—
முத்துச் சுடர்பூத்தாள்.

முக்குணப் போர்க்களமாம்-உலகில்
மூன்று [1] நரகமுண்டாம்-அதிற்
சிக்கி வருந்தாமல்-ஞானத்;
தீயைக் கொளுத்திவிட்டாள்
பக்குவப் பத்தியினால்-மனப்—
பாரத்தை நீக்கிவிட்டாள்
துக்க மினித்தொடுமோ-சுத்தசக்தி
தொண்டும் எம்மைவிடுமோ ?

நாதவிந்து கலைகள்-கடந்தே
நானெனுந் தத்துவத்தில்
தாதவிழ் தாமரையில்-அன்னை
தானென் றுளிருகின்றாள்
ஆதி பராசக்தி-அந்தம்
[2] ஆறுங்கடந்து நின்றாள்-சுத்த
ஜோதி மலையரசி பெருமையைச்
சொல்ல மொழியுமுண்டோ ?

---

1. காமம், குரோதம், லோபம்

2. வேதாந்தம், நாதாந்தம், போதாந்தம், கலாந்தம், யோகாந்தம், சித்தாந்தம்.

## 5. ஜய ஜய சுத்த சக்தி

ஜயஜய சுத்தசக்தி
சரண்பர மாத்மஜோதி!
பயந்தவிர்; பகைதீர்; ஆத்ம
பலமருள்; பழுத்த வாக்கு
நயந்தருள்; யோகசித்தி
நன்றருள் ஞாலவெற்றி
வியன்கலை நல்கு; நீயே
நான்எனும் வீறு தாராய்!

அலைமனம் அடங்கிச் சீறும்
ஆணவப் பேயடங்கி,
மலையென நிட்டைகூடி
வானென வாழ்ந்து தெய்வக்
கலைநதி யெனவுலாவுங்
களிப்பெமக் கீவாய்; உள்ளே
நிலைபெறும் அன்பருக்கு
நின்னையே நல்கும் எந்தாய்!

படிகம்போல் மேனிகண்டேன்
பால்வண்ணங் கண்டேன்; உள்ளம்
படிகக்கண் ணுடியாகிப்
பளிச்சென ஒளிரக் கண்டேன்
அடிமுடி காணுத் தூய
அறிவினைக் கண்டேன்; இன்பந்
துடிநடங் கண்டேன்-சுத்த
ஜோதியின் அருளைக் கண்டேன்!

ஓங்காரக் கண்ணாடிமுன்
ஒளிமணி விளக்கிலங்க
நீங்காத நிட்டைகூடி
நெஞ்சிலே நீயிலங்க
ஆங்கார மில்லாநானுன்
அன்பிலே ஆழ்ந்திலங்க,
தூங்காத தூக்கந் தந்தாய்
சுத்தஓம் சக்திதாயே!

பகைவரின் பலமொடுங்கப்
பாழ்சின வசையடங்க
நகைப்பவர் வாயடங்க
நானெனும் செருக்கடங்கத்
தகைமிகுங் கவிதைச்செல்வம்
தழைத்திட வரமளித்தாய்
வகைவகைச் சந்தத்தாலுன்
மகிமையைப் பாடவாராய்!

எனதுளத் துடிப்புநீயே
என்னுள்யான் எனதுநீயே
உனதருட் கருணையின்றி
யுயிரிலேன் உயிர்ப்பு மில்லேன்
மனதினைக் கடந்துஞான
வானிலே நடனமாடும்
புனிதமே என்னுளத்தைப்
புண்ணியக் கோயில் கொள்ளாய்!

ஆரறி வாருன் மாண்பை
அற்புதச் சிற்ப ராம்பா!
பாரறி விளக்கே பந்த
பாசத்தை யுருவி யோங்கும்
சீரறி யிரவியே நின்
சித்தமே யாக வென்னும்
தாரக மொன்றே பற்றிச்
சரண்புகும் என்னைக் காவாய்!

கலைதரு மறிவே ஞானக்
கண்மணிக் கொளியே; மாய
வலைதரும் தீமை நாடா
மனத்தெளி வருளி, அன்பு
நிலைதரும் அருளே, ஆன்ம
நேயமே மூலாதார
வுலைதருங் கனலே என்னை
உய்யக்கொண் டாளுவாயே!

தொன்றுநான் மறைக ளீந்தாய்,
துலங்குமா கமங்க ளீந்தாய்,
நன்றுயிர் வாழ [1] நான்கும்
வளம்பெற நல்கு கின்றாய்
வென்றுயர் கவிதை யீந்து
வீரமும் வீறு மீந்தே
என்றுமென் இதய மன்றில்
இருந்துல காளு வாயே!

1. அறம், பொருள், இன்பம், வீடு.

வாழ்கநின் அன்பர் கூட்டம்
　　வழிவழி நின்பேர் வாழ்க!
வாழ்கநின் யோக சித்தர்
　　மரபுநீ டூழி யிங்கே……
வாழ்கநின் அறிவுச் செல்வம்
　　வரந்தருந் திருக்கை வண்மை
சூழ்கஓம் சுத்த சக்திச்
　　சுடர்நில வுலக மெல்லாம்!



## 6. சுத்த சக்தி ஓம்!

சுத்தசக்தி சுத்தசக்தி
 சுத்தசக்தி ஓமென்போம்
ஓத்திசைக்கும் அன்பருள்ளம்
 யோகஜோதி யாகுமே
எத்திசையும் எப்பொருளும்
 எவ்வுலகு மிவ்வருள்
சத்தியம் சதாசிவம்
 தழைக்குமான்ம நேயமே.

பொன்னிளம் அருணனின்
 புதுநகை வனப்பிலே
புன்னகை மணங்கமழும்
 பூமுகப் பொலிவிலே
மின்னலிட் டபயமார்க்கு
 மேகவான் கருணையில்
உன்னருளைக் கண்டுகண்
 டுளங்கனிந் துருகினேன்.

கள்ளமோங்கும் பூவிலே
 கலங்கிவாடி டாமலே
தெள்ளறி வுடன்விழித்
 திருந்துனைத் தினந்தினம்
உள்ளமோங்கப் பாடியே
 உருகிநின் னருள்வளர்
வெள்ளமோங்கி முக்கனி
 விளைத்தளிக்க நீயருள்!

## 7. சகாய சுத்த சக்தியே!

பஞ்சபூதப் பஞ்சரத்தில்
பச்சிளங் கிளியென
வஞ்சமற்று நின்னையே
வழுத்தியன்பு செய்கிறேன்
நெஞ்சகந் துடிப்பதும்
உயிர்ப்பதும் நினைப்பதும்
தஞ்சமீந்த நின்செயல்
சகாயசுத்த சக்தியே!

[1] அயில் வடிவ மாகிடும்
அருமறை யடுக்கிலே
குயிலெனக் குரலெடுத்துக்
கூவுகின்ற நாதமே
மயிலென நடஞ்செயும்
மஹாதுரீய ஜோதியே
எயிலெரித்த ஞானமே
யிதயசுத்த சக்தியே.

1. வேல் வடிவான மேரு தண்டத்தில் ஆதார கமலங்களின் அடுக்கம்.

சத்தமின்றி நின்னருளைச்
சார்ந்து சாதனஞ்செயும்
பித்தனிந்தப் பிள்ளையைப்
பிரித்துவைப்ப தாகுமோ
சித்தசுத்தி யீந்துயோக
சித்தியீந் தருளுவாய் !
அத்தனம்மை யன்புருவ
மானசுத்த சக்தியே !

அன்னையப்ப னென்றதும்
அமுதமூறும் வாயிலே
உன்னவுன்ன நெஞ்சிலின்ப
மூறிப்பொங்கி யோடுமே
பின்னமா முயிரினங்கள்
பேதமின்றிக் கூடுமே
வன்னமா முலகக்கோயில்
வாழ்விலன்பு சூழுமே !

பெயர்வடிவப் பேதமின்றிப்
பேய்மனப் பிரிவின்றி
மயர்வுறுந் தனிமடமைச்
சாகசங்க ளின்றியே
உயிர்எனத் துடிக்குமுன்னை
உள்ளுறக் கலந்திடும்
உயர்தியான யோகத்தின்
உணர்வில் வாழ்க பூமியே.

## 8. எல்லாம் நீ!

கண்ணிற் காணுங் காட்சிநீ
    கருத்திலே நினைப்புநீ
விண்ணிற்காணு மற்புத
    விளக்குநீ ; கிழக்குநீ
மண்ணிற்காண் இயற்கைநீ
    வளம்பெறும் பசுமைநீ
பண்ணிற் காணும் ஓசைநீ
    பழத்திலே சுவையுநீ !

பெண்ணி லன்புப் பெண்மைநீ
    பிறந்திடுமா ணறிவுநீ
எண்ணிலா வுயிர்களில்
    இதயக்கூத் தியல்புநீ
தண்ணருட் பெருக்குநீ
    தழைத்த வாழ்வின் மூச்சுநீ
எண்ணநெஞ்ச கத்திலே
    இலங்குசுத்த சக்தியே !

உன்னையன்றி யானில்லை
    உயிரில்லை உலகில்லை
அன்னையப்ப னன்பெலாம்
    அடங்குமன்பு வானமே
என்னையாக்கி யுன்னையே
    யெனக்குள் வைத்த ஜோதியே
தன்னைப்பன்மை யாக்கியே
    தழைத்த சுத்த சக்தியே !

எனக்குறும் பெருமைகள்
　　உனக்குறும் பெருமைகள்
எனக்குறும் சிறுமைகள்
　　உனக்குறும் சிறுமைகள்
வினைக்குலப் பகைகடந்து
　　வெற்றிநாட்ட நீயருள்
எனக்கு வெற்றி யென்பதும்
　　உனக்கு வெற்றியாவதே.

கனக்குமாயக் காட்டிலே
　　கலங்கிநிற்கும் சேயெனை
நினக்கெழுந்து நின்னிலே
　　நிலைத்தியங்கு நேயனை
உனக்கினிய தொண்டனை
　　உதறித்தள்ளி யிப்படி
மனக்குரங் கிடம்வருந்த
　　வாட்டல்ஆட லாகுமோ ?



## 9. உன் விருப்பம்

விரும்புமுன் விருப்பிலாது
 விண்ணுமண்ணு மெங்குமே
துரும்புமிங் கசையுமோ
 சுரும்பதும் பறக்குமோ
அரும்பவிழ்ந் தழகுடன்
 அமுதத்தே னுக்குக்குமோ
கரும்பிலே கனியிலே
 யினிக்குமன்புக் கற்கண்டே!

எப்பெயர் வடிவுநீ
 எவர்சமய வுள்ளுநீ
அப்பெயர் வடிவுடன்
 அவர்சமயந் தாண்டியே
ஒப்பில்லாத ஆன்மநேய
 மோங்கொருமை கொண்டனை
முப்பொருளு மாயினை
 முதற்பெரும் பழமையே!

உலகமான கோயிலில்
 உயிர்த்தொகை யுருவிலே
இலகியாடும் உன்னையென்
 இதயமாங் குகையிலே
நிலவக்கண்டு கூடியே
 நிருத்தமாடி நின்னுடன்
விலகிலாத என்னுளே
 விலகிடாது வாழ்வாய்!

இங்குநீ புரிந்திடும்
    இதயமின் னடனமே
எங்குமிவ் வகண்டமாய்
    இலங்குமாட லானதே
அங்கு மிங்கு மென்னலின்றி
    யன்புளத் துடிப்பிலே
பொங்குமின்ப முண்டுவாழும்
    புண்ணியஞ்செய் யன்னையே !

ஈனமான பேதமின்றி
    என்னதுன்ன தின்றியே
வானவட்டம் போலநின்
    வளைப்பிலான்ம நேயராய்
மானமாக மானிடர்
    மனங்கலந்து வாழ்ந்திடும்
ஞானமாக மோனமாய்
    நடஞ்செய்சுத்த சக்தியே !



## 10. நின்னுள் யான்

**வி**த்தகன்கை வீணைபோல
வீரன்கைத் துப்பாக்கிபோல்
சித்தனுள் ளமைதிபோலச்
சேயுளன்னை யன்புபோல்
முத்தமிழ்ப் புலவனுள்
முகிழ்த்தெழுங் கவிதைபோல
சுத்த சக்தி நின்னுளே
சுழல்க தூய வாழ்க்கையே.

தூயசிந்தை தூயசெய்கை
தூயசெஞ்சொல் போற்றியே
தூய யோக சித்தியாற்
சுடருந்தூய சக்தியால்
தூயவுள் ளுறவுபேணித்
தொண்டுசெய்யும் அன்பரை
நேயராகக் காட்டுவாய்
நிகரிலாத தெய்வமே!

சாதிமா மதந்தரும்
சழக்கிலா துலகிலே
பேதவாதச் சூதுசெய்
பிரிவினைக ளின்றியே
ஆதவன் கதிர்கள்போல்
அனைவரும் இணைந்தொளிர்
சாதனத்தை நல்குவாய்
சதாசிவக் கருணையே.

ேபாலும் ஆழநல்
    லறிவைத்தந் தருளுவாய்
ஊழியற்ற வானைப்போல்
    உளத்தமைதி நல்குவாய்
ஏழிசைக் குழலியாழ்
    எனப்பணிவு நல்குவாய்
வாழிசை வழிவகுத்த
    வாய்மையான தூய்மையே.



## 11. சாந்த நாளைத் தா

பார்மிசை வகுப்புவாதப்
பாதகங்க ளின்றியே
ஊர்திருத்துங் கூச்சலின்றி
உள்ளுறத் திருந்தியே
பேர்புகழ் பதவி வேட்டைப்
பேயிலாதி யல்புறும்
சீர்திருத்த வாழ்வுவாழச்செய்
யெம்மன்புத் தெய்வமே.

கட்டிலா துழைத்துணுங்
கவலையற்ற திண்மையும்
தட்டிலாத வீறுகொண்ட
சக்திநல்கு கல்வியும்
மொட்டலர்வ தென்னவே
முகிழ்த்தெழும் புலமையும்
திட்டமாக நல்குவாய்
திருக்கருணை வெள்ளமே!

தாந்தம தெனுஞ்செருக்குஞ்
சாதிவாதத் தீமையும்
சாய்ந்துபண்டை மாமதச்
சழக்கும்பொய் வழக்கமும்
ஓய்ந்தெலாருஞ் ஜீவசாட்சி
ஒன்றைப்பற்றி வாழ்ந்திடும்
சாந்தநாளைக் காட்டுவாய்
சமரஸக் கடவுளே!

[1] அல்லலான நாட்டுரிமை
ஆழிவா னுரிமையாம்
தொல்லையின்றிக் குண்டுப்போர்
சுடும்கொடுந் துயரின்றி
எல்லைக்கோ டில்லாதுலக
மெங்குமொன்று கூடியே
நல்லதாற்றி வாழுகின்ற
நாளைத்தா கடவுளே !

---

1. இது எனது நாடு, என் கடல், என் வானம் என்னும் சுயநல உரிமை; அல்லலாகும்.

## 12. சுதந்தரக் கடவுளே

ஏகுமின்னும் ஆகுமின்னும்
என்னப்பெண்ணு மாணுடன்
யோகபோக மாகவாழ
வுள்ளொருமை நல்குவாய்
வேகவெம் புலனடக்கி
வேட்கைநெஞ் சடக்கியே
ஏகமாகு மான்மநேய
மீந்தருள் கடவுளே!

வஞ்ச [2]விற்பனையிலை
வரிசைச் சண்டை யில்லையே
நெஞ்சழிந் தழும்விதவை
நெட்டுயிர்ப்பு மில்லையே
மஞ்சட்குங்கு மத்துடனே
மாதர்தங்கச் சேய்களைக்
கொஞ்சியாடு நாட்களைக்
குலாவச்செய் கடவுளே!

1. ஏகுமின் (Negative) ஆகுமின் (Passitive)
2. வரகல்கம்.

பாதகஞ்செய் தட்சிணைப்
பணவணிக மின்றியே
சாதகஞ்செய் தீதிலாது
சம்மதித்த காதலர்
கீதமார் குயில்மயில்
கிளியெனக் களித்திடும்
சோதிநானை யீகுவாய்
சுதந்தரக் கடவுளே!

தொழிலுடன் இணைந்த கல்வி
தேர்ந்ததொண்ட ராகவே
எழிலுடன் பொதுநல
மெனவுழைத் துலகிலே
செழிபொருள் பகுத்துணும்
சிறந்த யோக மொன்றியே
அழிவிலா துயிர்கள் வாழும்
அன்பருள் கடவுளே.

நால்வருணம் ஆயிரம்
நலங்கெடும் வருணமாய்
மேல்வருணக் கீழ்வருண
வேறுபா டில்லாமலே
தோல்வருண மாயமின்றித்
தூயவுள் ளொருமையில்
ஆலெனச் செழித்திடும்
அமைப்பருள் கடவுளே.

## 13. ஒருமை கூடி வாழவே

ஓர் விரிந்த வானகம்
ஓரேபரந்த மாநிலம்
ஒருயர்ந்த மானிடம்
உளத்திலொன்று மன்புயிர்
ஓர்சிறந்த ஆன்மநேய
ஒருமைகூடி வாழவே
சீர்சிறந்த சுத்தயோக
சக்திவெற்றி சேர்கவே.

மின்னனைய பொய்யுடல்
மினுக்கிலே மயங்கிலேன்
பொன்னைப்பெண்ணைப் போகத்தைப்
புகழையும் விரும்பிடேன்
என்னைப்போல மன்னுலகை
யெண்ணியன்பு செய்வரம்
அன்னையப்ப னேயருள்
அமுதசுத்த சக்தியே!

நிலம்பலம் நெடும்புகழ்
நிறைந்தசெல்வ மாளிகை
தலம்புகழ் பெருமைகள்
சரித்திரப் பொலிவுடன்
பலம்பெறும் படைவலி
பரந்தவெற்றி யாவையும்
நலந்தரும் உனதுநாம
சக்திநல்கு மின்பமே.

தீங்கரும்பின் சாறெனத்
திதிக்குமுக் கனியெனப்
பூங்கமழுந் தேனெனப்
புதியபா லமுதென
ஓங்கிசைத் தமிழென
உலகிசை வளமென
ஈங்கெனக் கவற்றினும்
இனிப்பதுன் இசைப்பதே.

சீருயர்ந்த ஞானமும்
செழித்துயர்ந்த செல்வமும்
பேருயர்ந்த கீர்த்தியும்
பிணியிலா வுடலமும்
ஏருயர்ந்த வண்மையும்
எளியதாம் இறைவநின்
நேருயர்ந்த நல்லருள்
நிலவுகின்ற நேரமே!



## 14. வராதருள்

தானெனும் அகந்தையும்
தனிச்செருக்கின் வீக்கமும்
ஏனெனின் எரிசினக்
கொதிப்பும்ஏறுங் காமத்தால்
ஆனவூன் புணர்ப்புடன்
அழியுமாசை நோய்களும்
மானிடக் குறைகளும்
வராதருள் கடவுளே.

துக்கமான காட்சி
சூழலுகின்ற நெஞ்சமும்
சிக்கலான வஞ்சரின்
சிறுமனப் பொருமையும்
பக்குவமி லாதவர்
பகையும் பக்கம் வந்திடாத்
தக்கசூழ லீந்துமெய்த்
தவம்பலிக்கச் செய்குவாய்!

நஞ்சினுங் கொடியவர்
நமனினும் வலியவர்
வஞ்சமற்ற தொண்டரை
வசைதுய ரிடும்பையால்
வெஞ்சினப் பொருமையால்
வெடியகந்தைப் பேயினல்
அஞ்சிடத் துயர்செயும்
அரக்கரைப் பொறுப்பையோ?

எக்குலமும் எப்பிறப்பும்
    எவ்வினமும் உன்னினம்
மிக்குயிர்க் குலங்களுன்றன்
    மேனியென் றறிகுவோம்
ஒக்கநீ யிருக்கையில்
    உளந்தொறும் உலகெலாம்
தொக்க வாழ்வுச் சோலையிற்
    சுரண்டுகுண்டுப் போர்களேன் ?

அற்றமுற்ற மாந்தர்கள்
    அவலச்சண்டை செய்வதேன் ?
குற்றமற்ற சீலரைக்
    கொடியவர் குமைத்தலேன் ?
கற்றமெய்க் கவிகளும்
    கதியிலா தலைவதேன் ?
நற்றவக் கனலினுலின்
    ஞாலமான கோலமே !



## 15. வீறு தா!

குட்சியற்ற கொள்கையும்
கொடுமையற்ற நீதியும்
கட்சியற்ற தேர்தலும்
கடுமையற்ற சட்டமும்
உட்சின மிலாததூய
உள்ளுறவு மெய்திடின்
மட்சிறிய கூட்டிலே
மகிழமைதி தோன்றுமே!

கோபத்தீ கொதித்திடும்
கொடும்புயற் பகைவரின்
சாபத்தீயில் என்னைவாட்டிச்
சாந்தத்தைக் கெடுத்திடும்
ஆபத்தைத் தவிர்த்துன்அன்பர்
கூட்டத்தை யருளியென்
தாபத்தைத் தணித்தருள்
தயாவெனும் அமுதமே!

நச்சுறும் பகைக்குலம்
நடுநடுங்கி யோடவே
துச்சமா யொடுங்கிடத்
துயர்க்குலப் பிசாசுகள்
பச்சையூன் புசித்திடும்
பகாசுரர் பொடிபட
அச்சமின்றிப் போர்செயும்
அமரசக்தி நல்குவாய்!

சீறுபோர் முனையினிலும்
　　செஞ்சிலுவைச் சங்கம்போல்
ஆறுதல் அளித்திடும்
　　அருட்பணி யளித்தருள்
ஏறுவான் அணுத்திறல்
　　எளக்கனல் பெருகியே
வீறுகொண்டு தீமைதீய
　　நன்மைவெல்ல நீயருள்!

படிப்பிலும் பகட்டிலும்
　　படபடத்த பேச்சிலும்
நடிப்பிலும் உலகமேடை
　　நாடகப் புகழிலும்
தடிப்பிலும் சிறுமனச்
　　சலிப்பிலும் செருக்கிலும்
பிடிப்பறப் பிடித்தனன்
　　பிடிக்கரும் பிடிப்பையே.



## 16. ஓம் காளி

துயர்தரும் பொறுமையும்
துருதுருத்த சூழ்ச்சியும்
அயர்வுறுஞ் சினங்கொதிக்கும்
ஆத்திரப் பகைமையும்
மயர்வுற மனத்தினை
மருவியின்னல் செய்திடா
வுயர்குண மளித்தருள்
உயிர்க்கினிய தெய்வமே!

ஓம்க்லீம் ஓம்காளி
ஓம்பவானி சக்திஓம்
ஓம்க்ரீம் ஓம்ருத்ர
சக்திரக்த சண்டிஓம்
ஓம்ஹ்ரீம் துஷ்டசத்ரு
நாசதுர்க்கா சக்திஓம்
ஓம்தும் ஐம்ஔம்
ஹூம்சுத்த சக்திஓம்.

அச்சத்தை மிரட்டுவாய்
அரக்கரை விரட்டுவாய்
துச்சத்தை விலக்குவாய்
துயர்களைத் தகர்த்திடாய்
நச்சனைய வஞ்சரை
நலிக்கும்வீர துர்க்கையே
உச்சமான சீர்த்திநல்கும்
ஓம்காளி ஓம்சரண்!

நாயெனச் சினத்தினர்
நரியென மனத்தினர்
பேயெனக் கொடியவர்
பிணியென வருபவர்
சீயெனச் சுளிப்பவர்
செயும்துயர் பொடிபடத்
தாயெனக் கருணைகாட்டித்
தாங்குவாய் பவானியே!

வெம்பகைக் குலங்களின்
வெடிசினப் பொருமைகள்
சம்பமான வாய்வெடிகள்
சாய்ந்து தோல்விகண்டிட
நம்பியுன்னை நாடும்அன்பர்
நல்வினைகள் வென்றிட
அம்பிகைநின் ஆன்மசக்தி
யூறுமாற்ற லீந்தருள்!



## 17. விஜய சக்தி

சீறும்போர் முனையிலே
செயந்தரும் பயங்கரி
ஏறுநற் சபையிலே
இனியவாக் கருளுவாய்
கூறும்வீரக் கூட்டத்திற்
குறையிலாத கொற்றநல்
வீறுதந் தருளுவாய்
!

காளிகாளி யென்றுநான்
கனல்பெறக் கதறிடும்
வேளைவந்து வேளைவெல்லும்
வித்தையை யளித்தருள்
நாளெலாம் உனதிசையை
நாட்டும்பாட்டு நல்கிநின்
ஆளெனப் பணித்தருள்
அபயமீயு மன்னையே !

சித்தமூன்றித் தியானமூன்றிச்
செய்யுஞ்செய்கை யாவுநின்
பத்தியாய் நிவேதனம்
பலமதாகப் பாலிப்பாய்
சத்தமின்றி நின்சரண்
புகுந்துசாத னஞ்செய்தேன்
சித்தியீவ துன்கடன்
செழித்தசுத்த சக்தியே !

உலகவாழ்வில் எத்தனை
இடர்களுற்ற போதிலும்
கலகவெம் பிசாசுகள்
கனல்பொழிந்த போதிலும்
விலகிடத் துயர்க்குலம்
விழித்திருந் தருளுவாய்
இலக நின் பெருமை எங்கும்
இன்பவாழ்வு சூழ்கவே!

வன்னமாம் உலகக்கோவில்
வாழுமுன் உயிர்க்குலம்
பின்னமாய்ச் சிதைந்திடாது
பேரின்பத்தில் ஒன்றியே
உன்னருளில் ஓர்குல
வுணர்வுகொண்டு வாழவே
அன்னை நின்னை வேண்டினேன்
அமுதசுத்த சக்தியே!



## 18. வரந்தரும் பராம்பிகே !

அங்கையற்கண் அன்னையாய்
அருள்பொழிந்த சக்தியே !
பங்கயக் கரத்தினல்
வரந்தரும் பராம்பிகே !
துங்கநல் லடியவர்
துணைவரும் இணையிலாத்
தங்கமே கருணையான
தாயமுத மேசரண் !

காட்டுச்சிங்க மீதுசெல்லும்
காளைஏறி பங்கியே !
நாட்டுச்செல்வியே சுடலைக்
காட்டுநட்ட மாடியின்
வீட்டுச்செல்வியே, கருணை
வேதமோதி தேவர்பா
ராட்டுச்செல்வியே ! எனக்குன்
பாட்டுச்செல்வ மாகவே !

யாழிசை குழலிசை
முழவிசை யினியநல்
ஏழிசை வளங்களோ
டிறைஞ்சிப்பாடி யாடவே
வாழிசைத் தமிழளித்த
வண்மையேயென் னம்மையே
சூழிசை யமுதமே
சுருதியின் வடிவமே !

இறையுல கறிவறமொ
டன்பொழுக்க மில்லறம்
நிறைகுலந் தொழிலரசு
நீண்டயோக சித்தியின்
முறைவழி யெல்லாருமின்ப
முற்றிமுன் முன்னேறிட
மறைவகுத்த தெய்வமே
மனம்வகித் தருளுவாய்...!



## 19. ஒப்பிலாக் கருணையே!

யோகமாய் உலகெலாம்
    இயற்கையோ கிலேசிவ
போகமாக வாழ்வெலாம்
    புலன்வழி புணர்த்திடும்
தாகமோக சோகமின்றிச்
    சச்சிதானந் தத்தினைத்
தேகவாழ்விற் கண்டுமாந்தர்
    தெய்வவாழ்வு சேர்கவே!

அன்புசெய்யும் அன்பருள்
    அமுதமூறிப் பொங்கிடும்
இன்பமாய் வளர்ந்தனை
    இயற்கையாம் உலகிலே
துன்பரக்கர் வெய்யநஞ்சைச்
    சுட்டெரித்தி டாததேன்?
பொன்பரவுங் காலைமார்பிற்
    புன்னகைக்கும் பூவையே!

ஒப்பிலாக் கருணையே
    உயிரெனத் துடித்திடும்
செப்பரிய சின்மயத்
    திருவருட் பெருக்கமே
இப்பிறவி மாறிநின்
    னியல்பிலே யிருந்திடும்
அப்புதுப் பிறவியை
    யளித்தருளென் அன்னையே!

மணியுடன் ஒளியென
மனத்துடன் நினைப்பென
அணியுடன் அழகென
அழகுடன் மணமென
துணியுடனே நூலெனத்
தொகுந்திலங்கு சக்தியே
பணியுடன் இசைத்துனைப்
பராவிடும் வரமருள் !

சாதுவாகி யுன்னைப்பாடிச்
சாந்தமாக வாழ்கிறேன்
ஏதும்வே றறிகிலேன்
எதிரிகள் முளைப்பதேன் ?
சூதுவாது செய்யுந்துட்டர்
சூழ்ச்சிவீழ்ச்சி கண்டிடும்
ஏதுவில்லையோ ? உலகில்
என்றுமிந்தத் தொல்லையோ ?

ஏசித்துப்பி வைதடித்த
ஏசுவின் விரோதிகள்
ஆசித்துன்னை வாழ்த்துகின்ற
அன்பருக்குத் துன்பராய்
நாசத்தீமை சூழவே
நலிவிலாது வாழ்வரோ ?
பூசித்துன்னை வேண்டுவோர்
புகலிலாது தாழ்வரோ ?

## 20. காணும் இன்பம்

பூணும்பொன்னும் போலவே
புவியும்வானும் போலவே
ஆணும்பெண்ணும் அன்பறிவில்
ஆன்மநேய ராகவே
காணுலகில் வாழுகின்ற
காலந்தன்னைக் கண்முனே
காணுமின்ப மீகுவாய்
கனிந்தசுத்த சக்தியே!

லை பரத்தினை
இதயத்தே யுணர்ந்திடும்
அகத்திலே சுகத்தினை
அமைதியிற் செயலினை
சகத்தில்விண் ணரசினைத்
தனிப்பெருங் கருணையால்
உகத்தலென் னுயிருளே
யுகந்தகாட்சி யாவதே.

நினைத்ததே வடிவமாய்
நிலைத்ததே நிலையதாய்
அனைத்துமான நின்னை நாம்
அழைத்ததே பெயரதாய்
வினைத்தளை யிலாது நீ
விளைக்குமாடல் ஆடலாய்
எனைத்துநின் செயலதாய்
இருப்பதென் இயற்கையே!

காவியப் பொழிலிலே
கனவுவிண் மலையிலே
ஓவிய வியற்கையில்
உயிர்க்கலை யழகிலே
ஆவியை யுருக்குமுன்
அருட்சுடரி னன்பிலே
தேவியேயென் சிந்தனை
செழிக்குமின்ப மீகுவாய்!

கோடிக்கோடி விண்மலர்
குளிர்நகை புரிந்திடக்
கோடிக்கோடி நுண்ணணுக்
குலங்கள்கூத் தியற்றிடக்
கோடிக்கோடி யற்புதங்
குலாவுமண்டக் கோவிலில்
பாடிப்பாடி யுன்னையே
பராவுமின்ப மீகுவாய்!

அன்றுமின்று மென்றுமுண்மை
யன்பருட் பரம்பொருள்
ஒன்றுதான் எனும் உணர்ச்சி
ஓங்கிநீங்கி லாததாய்
நன்றறிந் துணர்ந்தது
நடனமாடுங் காட்சியை
வென்றுளே யுவந்துவந்து
வேட்டலென்றன் வேட்கையே!

உச்சமா மலையருவி
　　யோதும்வேத நாதமே
பச்சையம் பயிரைக்கொஞ்சும்
　　தென்றலோதும் பாசுரம்
இச்சைகொண்ட நற்கனி
　　இசைந்துபாடும் புள்ளினம்
அச்சமற் றுலாவியல்
　　அழகுடன் உலாவுவேன்.



## 21. என்னையாண்ட ஜோதியே!

அன்பிலே முளைத்திடும்
அருளிலே திளைத்திடும்
பொன்பொலி அழகிலே
பொருந்திடும் இயற்கையில்
இன்பமாகக் கூடியென்
னிதயத்தே னிசைகளை
உன்பழுத்த வுள்ளத்தூட்டும்
ஓகையென்றன் வாகையே!

சக்தியும் சிவனுமென்னச்
சாந்தமாகக் கூடியே
நித்தியம் பதம்பிடித்து
நிர்த்தமாடி நின்னையே
பக்திசெய் பனுவலீந்து
பாசுரத்தி னோசையே
எத்திசையும் சுத்தசக்தி
யின்பமென்னப் பாய்கவே!

அல்லலில்லை அச்சமில்லை
ஐயமில்லை; வாழ்விலே
இல்லையென்ப தில்லையே
எவர்க்கு மின்ன லில்லையே
எல்லையற்ற வான்குடை
நிழலிலின்ப மெய்துமே
எல்லையற்ற ஒன்றிலே
இணைந்துவாழு மன்பரே!

சித்தொளிர் வெளியிலே
சிதம்பரச் சபையிலே
முத்தொளிர் நிலாவிலே
முழுப்பொருள் முழக்கிலே
சத்துசித்து ஆனந்தத்
தனிநடம் புரிந்திடும்
சுத்தசக்தித் தெய்வமே
சுருதியாம் அகரமே!

அத்தனுகி யம்மையாகி
அன்புமாகி யின்பமாய்
ஒத்தநற் றுணையுமாய்
உலகமாய் உயிர்களாய்
எத்திசையும் எப்பொழுதும்
என்னுள்யானு நீயுமாம்
சுத்தசக்தி போற்றியென்னை
யாண்டசோதி போற்றியே!

குமரரிற் குமரனும்
குழந்தையிற் குழந்தையாம்
அமரரில் அமரனும்
அறிஞரில் அறிவதாம்
விமரிசைப் புலவருள்
வியன்பெரும் புலமையாம்
நமதுதூய நெஞ்சகத்து
நானெனத் துடிப்பதே!

போற்றிபோற்றி யோகமான
    போகமே சிநேகமே!
போற்றிஏக மேஅநேக
    மானபூர்ண ஜோதியே!
ஆற்றலீயும் வீரமே
    அறிவுநல்கும் ஆதியே!
போற்றிசுத்த சக்திஓம்
    பொலிகநின் பெருமையே!



# 1. சுத்த சக்தி அருச்சனை

•••○○○•••

ஓம் சுத்த சக்தி ஜயஸத்ய ஜோதி
ஓம் சச்சிதானந்த பரம க்ருபாநிதி

அன்பு மலரால் அன்னையைத் தொழுவோம்
இன்ப மெல்லாம் எளிதாய் வருமே!
அறிவா யெங்கும் நிறைவாய் போற்றி
அருளால் உலகை அளித்தாய் போற்றி
அன்பே வடிவாய் அமர்ந்தாய் போற்றி
அறவழி காட்டும் அரசியே போற்றி
அன்னையே போற்றி, அமுதே போற்றி!
ஆற்றலைப் பெருக்கும் ஊற்றே போற்றி
ஆக்கமும் புகழும் ஆக்குவாய் போற்றி
ஆருயிர்க் கோருயி ராணாய் போற்றி
ஆதி சக்தியே, ஆணையே போற்றி
இகபர சுகங்களை ஈவாய் போற்றி
இறவாக் கலையின் இறைவீ போற்றி
இருள் கடிந்தொளியை யிலக்குவாய் போற்றி
இகல்கெடுத் தமைதி யிசைப்பாய் போற்றி
இதயக் கனலா யெழுந்தாய் போற்றி
ஈரே மூலகையும் ஈந்தாய் போற்றி
ஈரிலாக் கருணை வாரியே போற்றி
ஈகையிற் சிறந்த மேகமே போற்றி
ஈன மொழிக்கும் ஞானமே போற்றி
ஈசனே டொன்றும் இறைவியே போற்றி
உலகெலாம் கோயில்கொண் டிலகுவாய் போற்றி
உயிர்களை நாளும் ஊட்டுவாய் போற்றி

உணர்ந்தோர் உணர்விற் குணர்வே போற்றி
உண்மை விளக்குங் கண்மணி போற்றி
உள்ளத் தின்ப வெள்ளமே போற்றி
ஊமையும் பேச வுன்னுவாய் போற்றி
ஊழையும் வெல்ல வுதவுவாய் போற்றி
ஊனுடற் பிணிகளை யொழிப்பாய் போற்றி
ஊரெலாஞ் செழிக்குங் காரே போற்றி
ஊணுடைத் தேவை யுதவுவாய் போற்றி
ஊற்ற மளிக்கும் ஆற்றலே போற்றி
எண்ணு மெண்ணத் தினிப்பாய் போற்றி
எண்ணிலாப் புவிவளர் விண்ணே போற்றி
எல்லாம் வல்ல வல்லபி போற்றி
எங்குந் திருவரு ளிறைப்பாய் போற்றி
என்னை யாளும் இறைவியே போற்றி
ஏகம் அநேகமாய் எழுந்தாய் போற்றி
ஏகாண்டத்தின் இரவியே போற்றி
ஏக்கந் தவிர்த்தெமை யூக்குவாய் போற்றி
ஏழைமை தவிர்க்கும் இலக்குமி போற்றி
ஏற்றமளிக்கும் இச்சையே போற்றி
ஐந்தொழில் புரியும் அருளே போற்றி
ஐம்பூத வுலகிற் காதியே போற்றி
ஐம்பிழை தீர்க்கும் அறமே போற்றி
ஐயந் தவிர்க்கு மெய்யே போற்றி
ஐக்யானு பூதி யருளுவாய் போற்றி
ஒன்றிய மனந்தொறு நின்றாய் போற்றி
ஒற்றுமை யோங்கும் உயிரே போற்றி
ஒருகுல முலகென் றுணர்த்துவாய் போற்றி
ஒவ்வோ ருயிர்க்கும் உள்ளமே போற்றி

ஒளியே, அகண்ட வெளியே போற்றி
ஓங்கா ரத்தின் உட்பொருள் போற்றி
ஓதா துள்வளர் வேதமே போற்றி
ஓங்குமா னந்தத் தீங்கனி போற்றி
ஓவா முயற்சி ஈவாய் போற்றி
ஓம்பரா சக்தி, ஓம்மஹா சக்தி
ஔவியப் பேய்களை அடக்குவாய் போற்றி
ஔதா ரியத்தின் ஆழியே போற்றி
ஔடத மாகும் அன்பே போற்றி
ஔபா சகரின் அருநிதி போற்றி
அஃகா வளந்தரும் ஆற்றலே போற்றி
கல்வி யருளும் கலைமகள் போற்றி
காளியே, சக்திக் கனலே போற்றி
காதலர் காணுங் காட்சியே போற்றி
கிழக்கே பகலாய்க் கிளரொளி போற்றி
கீழ்மை யகற்றுங் கீர்த்தியே போற்றி
குருவே, யனந்த குணமே போற்றி
கூன்பிறை சூடியின் குலசக்தி போற்றி
கெம்புகள் கெழுமிய கொம்பே போற்றி
கேண்மைக் கேற்ற பான்மையே போற்றி
கைத்தொழில் வளர்க்குங் கையே போற்றி
கொழுந்துவிட் டோங்குங் குண்டலி போற்றி
கோபப் பேயைக் குமைப்பாய் போற்றி
கௌரியே போற்றி, கன்னியே போற்றி
சரணம் சரணம் சக்தியே போற்றி
சாந்தப் பொலிவருள் சங்கரி போற்றி
சிந்தனைக் கினிய சிற்பரை போற்றி
சீலந் தந்தருள் சிவையே போற்றி

சுத்த சத்திஓம் நித்திய சக்தியே
சூரிய னுள்ளொளிர் சுடரே போற்றி
செந்தணல் போன்ற சுந்தரி போற்றி
சேயா யெனைவளர் தாயே போற்றி
சைதன்ய ஜோதி தருவாய் போற்றி
சொல்லற் கரிய சுகமே போற்றி
சோதி யளிக்கும் சொல்லே போற்றி
சௌபாக் கியமருள் சாம்பவி போற்றி
அஞ்சா நெஞ்சுரம் அளிப்பாய் போற்றி
ஆண்மையும் வீறும் அருளுவாய் போற்றி
ஞான மஹேஸ்வரி, நாரணி போற்றி
அஞ்ஞா னத்தை யழிப்பாய் போற்றி
வஞ்சர் கொடுமையை மடிப்பாய் போற்றி
சஞ்சலந் தவிர்த்தருள் சாந்தையே போற்றி
அட்டமா சித்தி யளிப்பாய் போற்றி
ஆதார கமலத் தமர்வாய் போற்றி
இடாகினீ, ராகினீ, லாகினீ போற்றி
காகினீ, சாகினீ, ஹாகினீ போற்றி
ஸஹஸ்ரா ரத்தமர் சக்தியே போற்றி
திங்களிற் புன்னகை செய்வாய் போற்றி
மங்கள சக்தி மாதவி போற்றி
சிங்கம் போன்ற திறலளி போற்றி
தங்கம் போன்ற தனுவளி தாயே
துணிவுளார்க் குதவுந் துணையே போற்றி
பணிசெய்வார்க் குதவும் பயனே போற்றி
மணிமருந் தருளு மந்திரம் போற்றி
அணிபெரும் படைப்பின் அரசியே போற்றி
தகரா காச சக்தியே போற்றி

தாரக மான சாந்தமே போற்றி
திறமைக ளீயும் தீயே போற்றி
தீனரைக் காக்கும் தெய்வமே போற்றி
துஷ்டரை யழிக்கும் துர்க்கையே போற்றி
தூயரைப் போற்றும் நாயகி போற்றி
தெவிட்டா துள்வளர் தேனே போற்றி
தேவியே, வாழ்விற் காவியே போற்றி
தைரிய மளிக்கும் தருமமே போற்றி
தொந்தந் த்விர்க்கும் சுதந்தரி போற்றி
தோற்றப் புவியைத் தோற்றினாய் போற்றி
தையலாய் உலகந் தருவாய் போற்றி
தயவே வடிவாம் தாயே போற்றி
நல்லார் விரும்பு நட்பே போற்றி 120
நாடி வீணையிற் பாடுவாய் போற்றி
நித்திய மான நிமலையே போற்றி
நீலியே போற்றி பாலையே போற்றி
நுண்ணியர்க் கறிவாம் பண்ணே போற்றி
நூலறி வுணரா நுட்பமே போற்றி
நெஞ்சினிற் கொஞ்சும் கிஞ்சுகம் போற்றி
நேர்மையாளர் நெறியே போற்றி
நைவுதீர் மருந்தை நயப்பாய் போற்றி
நொந்தவர் நோவற நோக்குவாய் போற்றி
நோன்பிற் குறுதி நுவலுவாய் போற்றி
பரமனோ டொன்றிய பார்வதீ போற்றி
பார்வையுள் ளாக்கினர் பார்ப்பே போற்றி
பிரம சக்தியாம் பிராமியே போற்றி
பீடுறு மன்பரை நாடுவாய் போற்றி
புண்ணியர் போற்றும் விண்ணே போற்றி

பூரணர் வணங்கும் நாரணி போற்றி
பெண்வடி வான பிரமமே போற்றி
பேதங் கடந்த நீதியே போற்றி
பைரவி போற்றி பவானி போற்றி
பொதுநிலை வளரும் போதமே போற்றி
போகமார் பூரண யோகமே போற்றி
பௌவமும் வானும் பரந்தாய் போற்றி
மங்கலம் பொழியும் மனோன்மணி போற்றி
மாசிலார் வணங்கும் மலரடி போற்றி
மின்னிப் பறக்கும் புன்னகை போற்றி
மீனைப் போன்ற விழியே போற்றி
முத்தர் விரும்பும் முதல்வீ போற்றி
மூலா தாரச் சுவாலையே போற்றி
மெய்யுணர் வளிக்கும் வித்தையே போற்றி
மேகலை யாடுந் தோகையே போற்றி
மைமுகில் விரிந்த மதியே போற்றி
மொள்ளக் குறையா வெள்ளமே போற்றி
மோகனக் கதிர்விரி முகமே போற்றி
மௌனிக ளுள்வளர் வானமே போற்றி
யாழெனக் கொள்ளென் யாக்கையை அம்மே,
யோக சித்தி யுதவுவாய் போற்றி
பெரியவ ருள்ளப் பெருமையே போற்றி
அரியவ ருள்ளத் தருமையே போற்றி
நிலத்தில் வளமாய் நிலவுவாய் போற்றி
வரங்களைப் பொழியும் வண்மையே போற்றி
வாழ்வு செழிக்கும் வாய்மையே போற்றி
விஞ்ஞா னத்தின் விளக்கமே போற்றி
வீறு மிகத்தரும் வீரியே போற்றி

வெற்றி யருளும் வித்தகி போற்றி
வையகங் கோயிலாய் வளர்வாய் போற்றி
பழமையே என்றும் புதுமையே போற்றி
அழகே போற்றி! அணியே போற்றி
அளவிலா விளையாட் டாற்றுவாய் போற்றி
அறநெறி வாழ்வை யளிப்பாய் போற்றி!
உன்னரு ளோங்கி உயிர்க்குலம் வாழ்க!
ஆன்ம நேயம் அவனியிற் பரவுக!
நன்மை யோங்குக, நாடெலாம் வாழ்க!
இன்ப வளங்கள் எங்கும் நிறைக!
அன்பும் அருளும் ஆயுளும் செல்வமும்
புலமையும் புகழும் பொங்குக நிதமும்!
புதுயுகம் வருக, பூரணம் பொலிக!
அமரவாழ் வருளாய் அன்னையே போற்றி!
**சுத்தம் அருளாய் சக்திஓம் சக்தி**
**முத்தி யருளாய் சக்திஓம் சக்தி**
**சமத்துவ மருளாய் சக்திஓம் சக்தி**
**சித்தி யருளாய் சக்திஓம் சக்தி**
**சக்தி ஓம்சக்தி, சுத்த சக்திஓம்!** 182



## 2. சுத்த சக்தி தியானம்

கருணை விரிவே காட்சிக் கினிய
அருணத் திருவே! அழகுத் தேனே!
எங்கும் நீயே! எல்லாம் நீயே!
வானம் உனது ஞான விரிவாம்
உடுக்கள் எல்லாம் ஒளிமணிப் பூணும்
செங்கதிர் உனது தேஜோ மயமாம்
மேகம் உனது மெல்லிய கூந்தலாம்
அருவி மாமழை அருளின் பெருக்காம்
காடுகள் உனது கவின்பெரும் வனப்பாம்
பூக்கள் உனது புன்னகைத் திரளாம்
கனிகள் உனது கைதரும் விருந்தாம்
பறவைகள் உனது பாட்டின் மெட்டாம்
குயில்கள் உனது குரலின் எதிரொலி
கிளிகள் உனது கிளர்வாய் மொழியாம்
அன்னம் உன்றன் அணிநடை யழகாம்
குவளைக் காடுகள் கோமள விழியாம்
முல்லை யரும்புன் முத்துப் பற்களாம்
பாதி மதியுன் பரந்த நெற்றியாம்
இந்திர வில்லுன் இணைந்த புருவமாம்
கடைவிழி யம்பு; கருவிழி வண்டு;
வெள்விழி மீனும்; உள்விழி யருளாம்;
இரவும் பகலும் இமைகள் உனக்கே;
உயிரெலாம் உன்றன் ஓயா உயிர்ப்பாம்
பயிரெலாம் உன்றன் பசும்பொலி வாமே.
பூமி யுனது பூந்தடந் தேராம்

காலமே உனது கடுவிசைப் புரவியாம்
இரவியும் மதியும் இரதசக் கரமாம்
ஆறு பருவமுன் அழகின் எழிலாம்
வாழ்வெலாம் உனது வழிநடைக் காட்சி
உன்னை யன்றி உயிருல கில்லை
அன்னை நீ யின்றி அசைவெனக் கில்லை
யானுன் வீணை நீயென் னிசையே!
யானுன் குழலே! நீயென் பாட்டே!
யானுன் உடலே நீயென் னுயிரே!
யானுன் கண்ணே நீயென் பார்வை!
யானுன் உள்ளம் நீயென் துடிப்பு!
யானுன் அன்பன் நீயென் அன்பே!
சிந்தையி லூறும் சின்மயத் தேனே!
மந்திரக் கவிமலர் மாலைகள் சூட்டி
வந்தனம் செய்தேன் எந்தாய் வணக்கம்!
சந்ததம் சுத்த சக்திஓம் சரணே !



## 3. சுத்த சக்தி அடைக்கலம்

### கலிவெண்பா

தொண்டர் நாதன் துணைவி பராசக்தி
கண்ட கண்கள் களிக்கு மனோன்மணி
கொண்ட நெஞ்சங் குளிரு மருட்சிவை
வண்டு வார்குழ லம்மையை வாழ்த்துவாம்!

### வேறு

ஓம்சுத்த சக்தி, ஓம்சிவ சக்தி
ஓம்பர தேவி உன்னடி பணிந்தேன்;
உன்னை யன்றிப் பின்னொரு துணையிலேன்
அன்னை, அன்னை, என்முகம் பாராய்
உறுதி யாக உன்னையே நம்பினேன்
வருதி யென்றொரு வார்த்தை சொல்லாயோ?
பெற்றவள் வெறுத்தாற் பிள்ளையென் செய்வேன்?
கற்றவர் போற்றுங் கனியே, தேனே
கல்வி யறிவிலேன், காட்சியு மில்லேன்
செல்வப் பெருக்கிலேன் சிந்தையி லுன்னை
அன்புடன் கூவும் ஆர்வமே கொண்டேன்
பண்புட னென்னைப் பரிந்தாட் கொள்வாய்
இல்லற மாகிய நல்லறத் திருந்தே
வல்லபி யுன்னை வழுத்துவோர் வாழ்கவே.
உன்னடி பற்றி உலகினில் வாழ்வேன்
இன்னடி யாரின் இணையிலாத் துணையே
கண்டதே காட்சி, கொண்டதே கோலம்

என்றலே மனதை இழுத்துள் ளடக்கி
ஐம்புலச் சேட்டைகள் அறவே நீங்கிப்
பைம்புல னுலவும் பசுங்காற் றெனவே
சுதந்திர மாகவுன் பதமலர் பற்றி
இதந்தரு தமிழால் இசைத்துனே நாளும்
கவலையை வெல்லுங் களிப்பெனக் கருளாய்.
திவலேயும் உறுதி சிதையா தருளாய்
மனத்தி லின்பமே மல்கிட வருளாய்
தனகனஞ் சுற்றம் மனைமகா ரெல்லாம்
உனதென மதிக்கும் உளமெனக் கருளாய்
வறுமை யின்றி வளமிகத் தருவாய்
நறுமண மலரின் நகையெனக் கருளாய்
உண்மையே பேசும் உரையெனக் கருளாய்
வண்மையே பெருகும் வளமெனக் கருளாய்
பிள்ளைச் செல்வம் பெருகிட வருளாய்
வள்ளற் கையால் வரமிகத் தருவாய்
கற்புள மனைவி களிப்புற வருளாய்
நற்புக ழோங்கும் நாவுக் கரசுபோல்
பத்தியும், பணியும், பைந்தமிழ் வாக்கும்
சித்த சுத்தியும், சிவக்கன லொளியும்,
தருவாய்; உனது தாளை நினைத்ததும்
வருவாய் வருவாய் வரதாம் பிகையே!
அன்பர் கேட்டதை அக்கண மளிக்கும்
அன்பே, அருளே அறிவுச் சுடரே,
பெயரைக் கேட்டதுந் துயர்கள் விலகும்,
உயரும் சீர்த்தி, உலகும் வணங்கும்;
அம்மையே வாழ்வின் அமுதமே போற்றி
இம்மைச் சுகங்கள் ஈவாய் போற்றி

பொய்யறு புகழும், பொலிவுறு மறிவும்
செய்ய நற் சிந்தையும், தியான சித்தியும்
அன்பர் அன்பும் அன்புப் பணியும்
விமலர் தொண்டும், வித்தகர் நட்பும்
அஞ்சா நெஞ்சும் ஆத்தும சக்தியும்
துஞ்சா முயற்சியும் தோன்ருத் துணையும்
வெற்றியுந் திருவும் வீரத் தணலும்
பெற்றுநான் வாழும் பெருமை யருளாய்
பகைவர் நடுங்கும் பலமெனக் கருளாய்
தகைபெருஞ் சுத்த தரும சக்தியே
மலைபோ லெனக்குக் கலைவள மளிப்பாய்
அலைகடல்போலே ஆழ்ந்த நல்லறிவும்
பிணியிலா வுடலும் பிறகிடாத் துணிவும்
அணியழ கோங்கும் ஆத்தும நேயமும்
கொடியார் என்முன் குமையும் சக்தியும்
அடியார் மகிழும் அருட்பணித் திறனும்
பொருளும், புவியும், போகமும், போதமும்
அருளும், ஆயுளும் ஆர்வமுந் தருவாய்
அம்மைப் பயனை இம்மையி லளிப்பாய்
அம்மையே அமரத் தன்மை யளிப்பாய்
எண்ணிய தெய்துந் திண்மன மளிப்பாய்
புண்ணியம் பெருகும் கண்ணிய மளிப்பாய்
கண்பார்த் தென்னைக் கைதூக்கி விட்டுப்
பண்புடன் காவாய் பகவதி தாயே!

சரணம் சரணம் சதாசிவ சக்தி
சரணம் சரணம் சத்குரு தேவி
சுத்த சக்தி ஓம், சுத்த சக்தி ஓம்
சுத்த சக்தி ஓம் சுத்த சக்தி ஓம்!

பூவெலாம் படைத்த பூதநா யகியே,
புகலடை புண்ணியர் தமக்குக்
காவலாய் நிற்குங் கருணை நாயகியே,
கண்கருத் துயிருட லினிக்கத்
தேவர்கொண் டாடுஞ் சித்திநா யகியே,
சிவந்தரு சக்திநா யகியே,
ஆவலாய் உன்னைக் கூவினேன், பணிந்தேன்,
அடியனுக் கருள்புரி வாயே!



## 4. சுத்த சக்திக் கொடி

ஓங்குகவே ஜயம் ஓங்குகவே—
ஓம் ஜோதிக்கொடி ஓங்குகவே
தீங்குகவே அறந் தாங்குகவே
சத்தியமே ஜயம் ஓங்குகவே.

யோகக் கொடியே வாழியவே—
ஒருமைக் கொடியே வாழியவே
ஏகக் கொடியே இன்பக்கொடியே—
இதயக் கொடியே வாழியவே.

நாதக் கொடியே வாழியவே—
ஞானக் கொடியே வாழியவே
வேதக் கொடியே வீரக்கொடியே—
வெற்றிக் கொடியே வாழியவே.

சோதிக்கோயில் முடிமேலே—
துலங்குங் கொடியே வாழியவே
நீதிக்கொடியே நேர்மைக் கொடியே—
நிறைவுக் கொடியே வாழியவே.

அருணக் கதிர்விட் டொளிவீசும்—
அமைதிக் கொடியே வாழியவே
கருணைக் கொடியே கனகக்கொடியே—
ககனக்கொடியே வாழியவே.

எல்லா வுலகும் உயிர்க்குலமும்—
இன்புற்றிடவே அன்புற்ற
நல்லார் போற்றிக் கொண்டாடும்—
ஞாலக்கொடியே வாழியவே.

பாருல கெல்லாம் ஓர்குலமாய்—
பார்ப்பவ ரெல்லாம் நம்மவராய்
சீருயர் ஆன்ம நேயமருள்
சிகரக் கொடியே வாழியவே.

காலப்பறவை குஞ்சுடனே
கலகலவென்றே பாட்டொலிக்க
கோலக் கிழக்கு மேற்குடனே
குலவுங் கொடியே வாழியவே.

அஞ்சும் குண்டுப் போர்வரினும்.
அஞ்சா துன்னை அரவணைப்போம்
துஞ்சாதென்றுந் தொண்டு செய்வோம்
சுத்தசக்திக் கொடி வாழ்க !



## 5. ஹாரதி கீதம்

ஓம்ஜய ஓம்ஜய ஓம்ஜயஓம்
ஓம்ஜோதி ஓம்ஜோதி ஓம்ஜோதிஓம்
ஓம்சிவஓம் சிவஓம் சிவஓம்
ஓம்குஹஓம் குஹஓம் குஹஓம்
ஓம்சக்தி ஓம்சக்தி சுத்தசக்திஓம்
ராம்ஜயராம் ஜயராம் ஜயராம்
சியாம்ஜய சியாம்ஜய சியாம்ஜயஓம்
பிரேம்ஜய பிரேம்ஜய பிரேம்ஜயஓம் !

ஜயஜோதி ஜயஜோதி ஜயஜோதிஓம்ஓம்
ஓம்ஜோதி ஓம்ஜோதி ஓம்ஜோதிஓம்
ஓம்சுத்த பரமாத்ம குருஜோதிஓம்ஓம்
ஓம்சக்தி சைதன்ய ஜகஜோதிஓம்ஓம்
ஹ்ருதயாத்ம நடராஜ பரஞ்ஜோதி ஓம்ஓம்
ஓம்விஸ்வ நாராயண த்யானஜோதி
ஓம்சர்வ கல்யாண நவஜீவஜோதி
ஓம்சுத்த யோகசமாஜாத்மஜோதி
ஓம்ஜோதி ஓம்ஜோதி ஓம்ஜோதிஓம் !
ஜயஜோதி ஜயஜோதி ஜயஜோதிஓம்ஓம் !

## 6. சந்தி மந்திரம்

எல்லாம் வல்ல இறைவா போற்றி
சூரியனுள் வளர் ஜோதியே போற்றி
உயிர்க்குயி ரான உயிரே போற்றி
நலந்தரு மங்கள நாயகா போற்றி
விண்புவிக் கெல்லாம் வேந்தே போற்றி
வணங்கத் தக்க வாய்மையே போற்றி
உள்ளிடங் கொண்ட ஒப்பிலா ஒருவா
அன்பும் ஆர்வமும் அடக்கமும் உறுதியும்
கொண்டு மனதுட் குவிந்துனை நினைந்தோம்
அருளால் அறிவைத் திருவுறத் தூண்டி
பேரின்ப சித்தி பெருக நடத்துவாய்
மடவிருள் போக்குஞ் சுடரொளி யாவாய்
பொய்தவிர் சத்திய போகமே யாவாய்
இருளற ஒளிக்கொளி எம்மை நடத்தாய்
பொய்யற வாய்மைப் பொருளை உணர்த்தாய்
தாமத மொழியச் சத்துவ மீவாய்
சாவறு ஞானத் தண்ணமு தாவாய்
மானிடம் அமர வாழ்வுறச் செய்வாய்
பாவம் போக்கிப் பரிசுத்த மருளாய்
கிழக்குந் தெற்கும் வடக்கும் மேற்கும்
மேலுங் கீழும் மேவிய பரமா
சக்தி மயனே சாந்த ஜோதியே
எல்லாத் திசையிலும் எல்லா நிலையிலும்
உளங்கொண் டுன்னை உபாசிக் கின்றோம்
சுபநா யகனே சுகதா யகனே

சிவன்அரி அயன்குரு தேவேந்திரன் எனப்
பலபெயர் கொண்ட பகவனே போற்றி
சர்வமுந் தானும் சமத்துவக் கடவுளே
எங்கள் வாழ்வுன் இச்சையால் இயங்கி
மனமொழி மெய்யில் மாசிலா தொழுகி
நலமே நினைந்து நலமே பேசி
நலமே செய்து நற்கதி யடைந்து
விஞ்ஞானத் தவ வேள்வியாய் வளர்ந்து
நாலாச் சிரம நன்மையும் பெற்று
அறம்பொரு ளின்பம் அருட்கலப் பென்னும்
பேறுக ளெல்லாம் பெரிதும் அடைந்தே
துன்மார்க்க மற்ற சன்மார்க்க மெய்தி
நோய்துய ரற்ற தூய பலத்துடன்
பகைசினம் பொறுமைப் படைகளை வீழ்த்தித்
தீர சக்தியாற் செயமே ஓங்கிப்
புகழ்பெற வாழ்ந்துன் புண்ணியம் போற்றி
உன்னொளி கலந்து தன்மய மாகிச்
சச்சிதா னந்தந் தழைத்திட வருளாய்
உனது தியானமே உயிர்ப்பா குகவே
உனது துதியே உரையா குகவே
உனது சேவையே உழைப்பா குகவே
பொறிபுலன் கரணம் அறிவாம் ஆன்மா
ஆகிய தத்துவம் அனைத்துமுன் னருளால்
தூய இன்பந் துலங்கிடச் செய்வாய்
நலந்தருங் கனலே ஞாயிறே போற்றி
உன்னரு ளாலே உலகெலாம் வாழ்க
எல்லா உயிர்களும் இன்புற் றிலகவே!
ஒருவரை யொருவர் திருடுத லின்றி

உண்மய மான உலகினர் என்றும்
தொழில்செய் தீந்துண் டெழில்பெற வாழ்கவே!"
யோகமும் சுத்த போகமும் வளர்க
ஞானமும் செல்வமும் தானமுந் தவமும்
நீண்டநல் ஆயுளும் நிறைவாம் இன்பமும்
அருள்வாய் ஓம்பரம் பொருளே வணக்கம்!
சேதனக் கனலே திவ்வியச் சுடரே
ஞான சக்தியே நலந்தரு கொழுந்தே
ஆருயிர் உனக்கே ஆகுதி யாகுக!
ஓம்ஓம் வணக்கம் உண்மையே போற்றி!



## 7. சுத்த சக்தி வேள்வி

எப்பொருள் அறிந்தார் அறிந்தவர் ஆவார்
எப்பொருளாள ரின்புறுவார்,
எப்பொரு ளிரவுபகலென்ப தின்றி
இறப்பையும் பிறப்பையும் வென்றே
சிற்பர ஒளியாய் அமரவாழ் வருளும்,
தேன்விளை ஞானவூற் றுமோ,
அப்பொரு ளுண்மை அறிவினுக் கென்னே,
அக்கினிக் கடவுளே நடத்தாய்

அகர வுகர மகர ஓங்கார
சிகர ஜோதி சிற்பர ஜோதி!
சுத்த ஜோதி சுதந்தர ஜோதி
சத்திய ஜோதி சமரச ஜோதி!

சிவநா ராயண பரிபூ ரணஓம்
ஹரிஹர சங்கர குருகுஹ ஜயஓம்!

ஒன்றுய்ப் பலவாய் உயிருக் குயிராய்
விளங்கும் கனலை விரும்பி வளர்ப்போம்!
அருட்பெருங் கனலே, ஆருயிர்க் கனலே!
இருட்டினை விரட்டிடும் இரவிக் கனலே!
சக்திச் சுடரே, சாந்தச் சுடரே,
பக்திக் கனலுடன் பணிந்தோம் உனையே!

தாமத மாயை தன்னை விலக்கிச்
சேமந் தருவாய் சிவச்சுட ரொளியே!
வீறு தருவாய் வெற்றிக் கனலே;
ஆறுத லளிப்பாய் அன்புக் கனலே!
ஆற்றலும் ஆயுளும் அளிப்பாய் போற்றி
அருளும் பொருளும் ஆக்குவாய் போற்றி
மருளும் மதியை மாற்றுவாய் போற்றி
துன்பந் துடைத்துத் துயரை விலக்கி
இன்பம் பெருக்கும் எழிலே போற்றி
உள்ளன் புடனே உன்னை வணங்கினேம்
தெள்ளிய கருணை வெள்ளமாய் வருவாய்!
மரபு விளங்க மக்களைத் தருவாய்
உழைத்த செல்வமும் உழைக்கும் ஆற்றலும்
உலகிற் கினிதாம் உத்தமத் தொழிலும்
வந்ததைப் பகுத்துணும் சிந்தையும் அருள்வாய்
சீர்மை யருளாய் நேர்மை யருளாய்!
வீர தீரமும் வெற்றியும் அருளாய்
அமைதி யுள்ளமும் அயரா முயற்சியும்
கட்டறு மனமும் கலங்கா வுறுதியும்
காரிய சித்தியும் கோரிய வரமும்
மங்கல வாழ்வும் எங்களுக் கீவாய்!
உலக மெல்லாம் ஒருகுல மாகி
அருள் வழி வாழும் அன்பினைத் தருவாய்;
யோகமும் சுத்த போகமுங் கொண்ட
செவ்விய திவ்விய ஜீவனந் தருவாய்!
பிரம சரிய குருகுலக் கல்வியும்
திண்மையும் தண்மையும் ஒண்மையுந் தருவாய்
அறம்பொரு ளின்பமும் அருளும் பொலியும்

எங்கள் வாழ்வு பொங்குக திருவே!
எண்ணும் எழுத்தும் கண்ணும் கதிரும்
உயிரும் மெய்யும் உலகும் வானும்
இயற்கையும் கடவுளும் இதயத் துடிப்பும்
போல வாழும் பொலிவெமக் கருளாய்!
சீலமே தருவாய் சிவத்திருக் கனலே
ஒற்றுமை தருவாய் உள்ளொளிக் கனலே
நற்றவக் கனலே ஞானமெய்க் கனலே
பாரெலாம் பரவிய பராபரக் கனலே
இதயக் குகையில் எழுந்தவக் கனலே
முருக வேளாக முளைத்த கனலே
குமுறி மேலேறும் குண்டலிக் கனலே
போற்றி போற்றி புண்ணியக் கனலே
பூரணக் கனலே காரணக் கனலே
சரணம் சுத்த சக்திக் கனலே
ஓம்சுப மங்கல ஒளிமணிக் கனலே
ஓம்சுயஞ் சோதி ஓம்சுவாக ஓம்!



## 8. சுடர் வணக்கம்

ஓங்குக செஞ்சுடரே - எங்கள்
உள்ளொளி வானுயர் வெள்ளொளி காட்டிட
வீங்குக வெண்சுடரே - நெஞ்சில்
வீரம் பெருகிடக் கூரம்பு போற்சிகை
தாங்குக நீள்சுடரே - நிதம்
தந்தெமக் கிந்திர போகமும் யோகமும்
ஓங்குக தெய்வச் சுடர் - நிதம்
ஓம்தத்ஸத் ஓம்தத்ஸத் ஓம்தத்ஸத் ஓமென
(ஓங்குக)

நெற்றிக்கு மேலுயர்ந்தே - அங்கு
நின்மல மாயொளிர் பொன்மணித்
தீபம்போல்
கொற்ற நெடுஞ் சுடரே - கடுங்
கூற்றையுஞ் சாடிடும் ஆற்ற லளித்தருள்
பெற்றவள் போலுருகி - நிதம்
பேணியெம் அன்பினைப் பூணும் புகழ் பெறும்
வெற்றிமணிச்சுடரே - அருள்
விண்ணர சையிந்த மண்மிசை நாட்டிட
(ஓங்குக)

வேண்டி வணங்குகின்றோம் - தெய்வ
வேட்கைகொள் உள்ளத்தில் வீறுற்
றெழுந்தின்பத்
தாண்டவ மாடிடுவாய் - சொக்கத்
தங்கத் தணலுடன் எங்களுக் கீந்திசை
தூண்டி நடத்திடுவாய் - நாங்கள்
சுத்த சுதந்தர நித்திய வாழ்வினை
யாண்டும் பரப்பிடவே - பர
மாத்ம பலமருள் அக்கினித் தேவனே !

(ஓங்குக)

எண்ண முயர்த்திடுவாய் - வாக்கில்
இன்கவி பொங்குக வுன்கனல் வெள்ளம்
போல்
கண்ணைத் திறந்திடுவாய் - உளக்
கண்ணைத் திறந்திடுவாய் - எங்கள்
காதலிலே தெய்வச்சோதி யொளிர்மனத்
திண்மை யளித்திடுவாய் - திரள்
செல்வங்கள் யாவையும் நல்கிடுவாய் - அறி
வுண்மை யின்பஞ் செழிக்க - நிதம்
ஓம் தத்ஸத் ஓம் தத்ஸத் ஓம் தத்ஸத் ஓமென

(ஓங்குக)

## 9. சுத்த சைதன்ய அருச்சனை

பக்கண்ணுடியில் சக்கரம் வைத்து தீபட
மலர், விபூதி, அல்லது குங்குமத்தால் அருச்சனை நடத்துக.]

ஓம்பரஞ்ஜ்யோதி ஸ்வயஞ்ஜோதி சுத்தஜோதிஓம்
ஓம் அந்தர்ஜோதி மஹாஜோதி ஆத்மஜோதிஓம்
ஓம் பஹிர்ஜோதி விஸ்வஜோதி ப்ராணஜோதிஓம்
ஓம்ஜ்யோதி ஓம்ஜ்யோதி ஓம்ஜ்யோதிஓம்

(ஒவ்வொரு மந்திர முதலிலும் ஓம் சேர்த்துச் சொல்லுக)

ஓம் சுத்த
பரமாத்மனே நம:
ஸ்வயம்ஜோதி
ப்ரகாசாய நம:
நம:
ஹ்ருதயாத்மனே நம:
பராத்பராய நம:
பரமேசாய நம:
பரந்தாமனே நம:
விஸ்வேசாய நம:
ஜீவேசாய நம:
சுத்த பராசக்தி
ஸ்வரூபாய நம:
பரப்ரஹ்மணே நம:
பரஞ்ஜோதிஷே நம:

பக்தப்ரியாய நம:
பராக்ரமாய நம:
பரமக்ருபாகராய நம:
வாகசாய நம:
ப்ரும்ம
சிவஸ்வரூபாய நம:
கணேசாய நம:
கருணேசாய நம:
காயத்ரீஸ்வரூபாய
நம:
கைவல்ய சுகதாயகாய
நம:
கலிமல ஹராய நம:
காமக்ரோத லோப
மோஹ மதமத்சர
நாசாய நம:

கலாவிலாசாய நம:
நாத விந்து
கலாதீதாய நம:
கவிரஞ்சனாய நம:
கந்தர்வ வித்யா
விலாசாய நம:
கோமளாய நம:
கோடிசூர்யப்ரகாசாய
நம:
அனந்த கல்யாண
குணாலயாய நம:
அதுல ப்ரபாவாய
நம:
அகில் ஜகத் லீலாய
நம:
அகண்ட பரிபூர்ணாய
நம:
அனகாய நம:
அமராத்மனே நம:
அருணார்க்காய நம:
அப்ரமேயாய நம:
அவ்யக்தாய நம:
அஷ்டாங்க
யோகாய நம:
அதீந்த்ரியாய நம: 40
அகார உகார
மகாராய நம:

ஆதார சக்ராய நம:
ஆதியந்த ரஹிதாய
நம:
ஆகாச சரீராய நம:
ஆத்மசாக்ஷாத்காராய
நம:
ஆதிமூலாய நம:
அத்யக்ஷாய நம:
ஆகர்ஷணாய நம:
அரவிந்தாய நம:
அஷ்ட சித்தி
ப்ரதாயகாய நம:
இஷ்ட சித்தி
ப்ரதாயகாய நம:
இகபரசுக தாயகாய
நம:
இச்சா க்ரியா ஞான
சக்தி சமேதாய நம:
ஈச ஜக ஜீவாதீதாய
நம:
ஏகேசாய நம:
வாகீசாய நம:
ஏகாக்ஷராய நம:
ஐஸ்வர்யாய நம:
ஓங்காராய நம
ஔஷதாய நம: 60

சுந்தராய நம:
தத்வனுய நம:
சுத்தாய நம:
ஸ்வதந்த்ராய நம:
ஸமத்வாய நம:
ஸத்யாய நம:
சாந்தாய நம:
தர்ம ரக்ஷகாய நம:
ஸாது சம்ரக்ஷணுய
நம:
ஸர்வாத்மனே நம:
சர்வபூத தயாநிதயே
நம:
சர்வ ஜீவோத்தாரகாய நம:
சர்வதோமுகாய நம:
சர்வ திக்விஜய
ப்ரபவே நம:
சர்வ
ப்ரதாயகாய நம:
சர்வ மந்த்ர யந்த்ர தந்த்ர
சர்வசக்தயா ய நம:
சர்வ சம்பத்கராய நம:
சர்வ பந்த தொந்த
நாசாய நம:
சர்வ துக்க நிவாரணாய
நம:
சர்வ சத்ரு ஹராய
நம: 80
சர்வ ரோகநிவாரகாய
நம:
சர்வ பீடா
பரிஹர்த்ரே நம:
சர்வ வித்யா
ப்ரகாசகாய நம:
ஜகன்மங்களாய நம:
ஸஹஸ்ரார நிலயாய
நம:
ஸ்ரீநிவாஸாய நம:
ஸ்ரீகராய நம:
திவ்ய ஜீவனுய நம:
தீன ரக்ஷகாய நம:
தேவஜாதி
நிர்மாபாய நம:
தேஜோநிதயே நம:
நரநாராயணுய நம:
நாதாத்மகாய நம:
நாமரூபாதீதாய நம:
நவயுக நாயகாய நம:
நிரஞ்சனுய நம:
நிஷ்களங்காய நம:
நிர்விஷயாய நம:
நிர்மலாய நம:

நிர்க்குணய நம: 100
நிராலம்பாய நம:
நிரதிசயானந்தாய
நம:
நித்யமஹோத்ஸவாய
நம:
மகேசாய நம:
மார்த்தாண்டாய நம:
மகாதேவாய நம:
மகாா்
நம:
மகாதாண்ஸாய நம:
மகாகுண்டலி
ஜ்வலனய நம:
மகாதுரிய சமாதிஸ்திதாய
நம:
மகாபக்
சித்தாய நம:
மகாய
நம:
ஹடராஜ மந்த்ர தந்த்ர
யோக சித்தாய நம:
யோகிஹ்ருத் பத்ம
பாஸ்கராய நம:
யோகேஸ்வராய நம:
யோகப்ரியாய நம:

வேத வேதாந்த
தத்வக்ஞாய நம:
வாசாமகோசராய நம:
வைராக்ய நிரதாய
நம:
ாய
நம: 120
விஞ்ஞாணய நம:
விஷ்ணவே நம:
நாராயணய நம:
ராமாய நம:
ப்ரேம சாகராய நம:
க்ருஷ்ணய நம:
கீதாம்ருதவர்ஷகாய நம:
ரமணய நம:
சிதானந்தாய நம:
சிவானந்தாய நம:
நடராஜாய நம:
ஷண்முகாய நம:
பரமபித்ரே நம:
அல்லாய நம:
அஹூராய நம:
புத்தாய நம:
சித்தாய நம:

ஸ்ருஷ்டி ஸ்திதி
சம்ஹாரகாரகாய நம:

அனுக்ரககராய நம:

சோமசூர்யாக்னி
ஸ்வரூபாய நம:

வாணீ, லக்ஷ்மீ, காளீ,
மகேஸ்வரீ, மனேன்-
மணீசாய நம:

த்யானுத்மகாய நம:

அகண்ட பரிபூர்ண
சச்சிதானந்தாய நம:

சுத்த யோக சமாஜ
சத்குரு பரமாத்மனே
நம:

ஜயப்ரதாய நம:

ஓம் தத் ஸத் ஓம்!

ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண
சச்சிதானந்த யோக வேதாந்த
ஜோதி ஸ்வரூப பரிசுத்த சக்தி
பரமாத்மனே நம:

நானுவித மந்த்ர புஷ்பாணி சமர்ப்பயாமி.



# 10. மந்திர கீதம்

சுத்தசக்தி சுத்தசக்தி சுத்தசக்தி ஓம்சிவம்
ஸ்வதந்த்ர சக்தி ஓம்சிவம் ஸமத்வசக்தி ஓம்சிவம்
ஓம்சிவம் சிவோஹம் சிவமயம்

சத்யஞான தர்மசக்தி சாந்தசக்தி ஓம்சிவம்
சச்சிதானந் தாத்மசக்தி ஸர்வசக்தி ஓம்சிவம்
(ஓம்)

வேதசாஸ்த்ர ஸகலகலா வித்யாசக்தி ஓம்சிவம்
வீரதீர தைர்யகீர்த்தி விஜயசக்தி ஓம்சிவம்
(ஓம்)

நாதகீத கானகலா நடனசக்தி ஓம்சிவம்
மஹாமந்த்ர யந்த்ர தந்த்ர வஸ்யசக்தி
ஓம்சிவம் (ஓம்)

ஆயுரா ரோக்யதிவ்ய ஜீவசக்தி ஓம்சிவம்
ஆத்மசக்தி ஐக்யசக்தி அமரசக்தி ஓம்சிவம்
(ஓம்)

சூர்யவீர்ய சுக்லஊர்த்வ ரேதசக்தி ஓம்சிவம்
சுந்தரமய மங்களகர சுகுணசக்தி ஓம்சிவம்
(ஓம்)

யோகபோக த்யாகசக்தி லோகசக்தி ஓம்சிவம்
[illegible] போசக்தி ஓம்சிவம்
(ஓம்)

பூதமாத்ர கரணேந்த்ரிய ப்ரக்ருதிசக்தி ஓம்சிவம்
புண்யகண்ய பூர்ணமகா புருஷசக்தி
ஓம்சிவம் (ஓம்)

ஸ்தூலப்ராண மனவிஞ்ஞானனந்தசக்தி ஓம்சிவம்
சின்மயசிவ சன்மயபரஞ் ஜோதிசக்தி
ஓம்சிவம் (ஓம்)

கர்மபக்தி ஞானராஜ யோகசித்தி ஓம்சிவம்
ஸஹஸ்ரார மஹாதுரிய ஸ்ருஷ்டி சக்தி
ஓம்சிவம் (ஓம்)

துஷ்டசத்ரு நாசசக்தி துர்க்காசக்தி ஓம்சிவம்
அஷ்டலக்ஷ்மி ஞானவாணி ஆதிசக்தி
ஓம்சிவம் (ஓம்)

ப்ரம்மசக்தி விஷ்ணுசக்தி ருத்ரசக்தி ஓம்சிவம்
மஹேச சதாசிவகுஹ பரஞ்ஜோதி சக்தி
ஓம்சிவம் (ஓம்)

கருணரஸ பரிபூரண மாத்ருசக்தி ஓம்சிவம்
அருணகிரண அமலநிமல அம்ருத சக்தி
ஓம்சிவம் (ஓம்)

குஞ்சிதபத அபயஹஸ்த வாஞ்சிதபல தாயகம்
குருவரசிவ ஹரஹர நட ராஜசுத்த சக்திஓம்
(ஓம்)

## 11. சுத்த சந்நிதி முறை

ஒன்றேபலவாகி யுள்ளத்துயிர்த்துடிப்பாய்
நின்றே விளையாடு நேயமே — வென்றிக்கு
வித்தே வழிகாட்டும் வேதப் பொருளேயென்
சுத்த முறையீட்டைத் தூண்டு.

அன்னையெனக் காவாய் அறிவிப் பவனுவாய்
உன்னை யுணர்ந்திங் குயிர்க்கிறேன்—என்னை நீ
கைவிட்டால் வேறு கதியுண்டோ வானின்றி
வையத்திற் குண்டோ வகை?

பூசித்தே னுன்னைப் புனித மலர்சூட்டி
நேசித்தே னுள்ளே நினைந்துருகி — யாசித்தேன்
எப்போது மன்புசெயும் இன்பத் திருவரமே
தப்பாது தந்தருளெந் தாய்!

பாடுந் திறனன்றிப் பாரிற் புகழ்விரும்பி
ஓடுந் திறனில்லேன் ஒண்டியேன்—வீடென்று
நின்னடியில் வாழ நினைத்தேன்; கருணையினுல்
என்னையெடுத் தாளா யினிது.

எந்நாளும் உன்னை இணைபிரியா தோதினேன்
அந்நாளுன் னுளானேன் அன்படியேன்—இந்நாளில்
என்னை மறந்தால் எளியேன் புகலேதோ!
உன்னைமற வேனுறுதி ஓம்.

கண்ணீர் வடித்துக் கதறினேன் கண்பாராய்
தண்ணார் அமுதே தயாபரியே—புண்ணாகி
நொந்தேன் உலகினிலே நூறிடரைத் தாண்டி
வந்தேன் மகனெனவே வாழ்த்து.

அறியாத காட்டில் அனைவருங்கை விட்டார்;
வறியேன் முதிய வயதில்—உறவுதுணை
நீயன்றி யில்லையிலை; நீரின்றி வண்மையிலை
தாயமுதே யன்புவரந் தா...

இம்மா நிலத்தே யியல்பான யோகநெறி
அம்மா தழைத்துன் னருளோங்க—நிம்மதியாய்
வைத்தென்னை வாழ்வாங்கு வாழ வழிசெய்வாய்
சத்திமிகு மன்பர்களைத் தந்து.

ஓங்கித் தழைக்க வுயர்யோகக் கோயிலினைத்
தாங்கித் தயவருளெந் தாரகமே—நீங்காத
பாட்டும் பணியும் பரமாத்ம சித்தர்களின்
கூட்டுங் குலவக் குறித்து.

சாம வேதனையைத தீர்ததருளாய்
ஆறுதலை நல்கும் அணிமயிலே—மாறுபடும்
வெம்பகையை நூறுகின்ற வெற்றிவேல் வீரனையே
எம்பக்கம் வைப்பா யினிது.

தாடி நரைத்துத் தளர்ந்த முதுமையிலே
ஓடி யுழைக்கும் உடம்பில்லேன்—பாடிநிதம்
உன்பரமென் றுள்ளேன்; உலகமே நீயாட்டும்
பம்பரமென் றுள்ளேன் பணிந்து.

வஞ்சர் தருந்துயரு மற்றோரை வாழவொட்டா
நஞ்சர் துயரு நலியவே—கஞ்சமலர்க்
கண்பார்த்து நீயெம்மைக் காவாய்; எமதுமனப்
புண்பார்த்து நன்மை புரிந்து.

தூற்றித் துயர் செய்யுந் துட்டர் திருந்திவரும்
ஆற்றலைத்தாராய்அறிவொளியே—ஏற்றென்னைப்
பீடுபெறச் செய்து பெரியமனம் வைப்பாயுள்
ளாடுபரா சக்தியரு ளே.

உலகால யத்தினிலே யுன்னன்பு நேயர்
நிலவான்ம யோக நிலையம்—பலகாண
வேண்டினேன்; வெற்றி விளைப்பாய் வியன்சுடரே
ஈண்டடியார் சேர வினிது.

என்னுவியெல்லாம் எனதுடைமை யென்பதெலாம்
உன்னு லுனக்கே யுவந்தளித்தேன்—அன்னையே
எப்படியுன் னிச்சை யெளியேனை யேவிடுமோ
அப்படி நடப்பே னறிந்து.

தள்ளா வயதினிலே தனியே நடக்கின்றேன்
எள்ளாது நீயும் இருதுணையே—உள்ளார
நேசித்துப் பூசித்து நித்தநித்த மன்புவரம்
ஆசித்தென் னுர்வமுரைத் தேன்.

தூய பெரியாரைச் சுட்டுமதி கெட்டலையும்
பேய ருலகைப் பிரிந்தென்றுந்—தாயனைய
உள்ளன்பு கொண்ட வுயிருலகைக் கண்டின்பங்
கொள்ளன்புச் செல்வங் கொடு.

வடுமொழி பேசாமல் வன்கோபத் தீயர்
கடுமொழியென் காதில் விழாமல்—கெடுமதியர்
பக்கம் வராமற் படுபாவி யாங்கவலைத்
துக்கம் வராதவழி சொல்.

வேகமாய் வந்து விசனந்தீர்த் துன்னருளைத்
தாகந் தணியத் தயைபுரிவாய்—மாகவியை
அப்பரைச் சுந்தரரை யாண்ட குருமணியே
ஒப்புனக் குண்டோ வுரை?

ஆத்திரக் கோபம் அணுகாமல் வீம்புரைசெய்
நாத்திகர் என்னை நகையாமல்—தீத்தணலும்
குண்டலி சக்தி குறையாமல் எப்போதும்
அண்டையிருந் தன்பைவளர்ப் பாய்.

உன்னுள்ளே யாலிருப்ப துண்மையெனின் என்றென்றும்
என்னுள்ளே நீயிருப்ப திர்சையெனின்—மன்னுள்ளே
புல்லர் துயரம் புகாது தடுத்தாண்டென்
அல்லலொழித் தன்பா லணை.

தீராத நோயெல்லாந் தீர்க்குந் திருவருளே
வாராத தீயர்பழி வந்தாலும்—ஓராதுன்
மெய்யருளே தாரகமாய் வேட்டேன்; ஒளிகாட்டிப்
பொய்யிருளைப் போகப் புரி.

தங்க நிழலளித்த தண்ணருளே மெஞ்ஞானச்
சிங்கமே யோகச் சிகரமே—இங்கிருந்தே
காலத்திற் கேற்ற கடமை நிறைவேற்றி
ஞாலத்தி லேவெற்றி நாட்டு.

மூலக் கனலே, முதிய வுலகாளுங்
காலக் கனலே கதிரொளியே—நீலகண்டன்
பாகத் தமர்ந்த பரம சிவக்கனலே
யோகத் தமர்வாயென் னுள்.

மண்ணுக்கு வான்போல் வளத்திற்கு மாரிபோல்
கண்ணுக் கொளிபோலக் காப்பாற்றும்—வண்மையே
அண்டம் படைத்தாளும் ஆற்றலே நீயெங்கும்
உண்டுநா னுண்டுநீ யுள்.

யோக சமாஜம் உருவாகி நல்லுலகம்
ஏக சமாஜம் எனவோங்கத்—தாகமிகும்
அன்பர் குழுவை யருளாய் சிவகுருவே
உன்பணியே யென்பணியென் ஞோர்ந்து.

ஞான சபைகண்ட நாதாந்த வேதாந்த
மோன சமாஜ முதல்வனே—தீனன் செய்
யோகத் திருவுருவே உள்ளார்வ வெள்ளமே
தாகத்திற் கன்பமுதந் தா.

சாதி சமயச் சழக்குகளைக் கண்டுலகப்
பேதவினை கண்டுமிகப் பேதுற்றேன்—வீதியிலே
வேற்றுமையின் வஞ்சவிளையாட்டைக்கண்டுமனம்
ஆற்றுகிலேன் ஆறுதலைத் தா.

குருபீடக் கூத்துகளும் கும்பிடுவோர் கூத்தும்
வருமானக் கூத்தும் வரிக்குத்—தருமானக்
கூத்துங்கண் டுள்ளே குறிப்பா யிருக்கின்றேன்
காத்தருளாய் சாந்தக் கனி.

உபாசனை

தாந்தாங் கடவுளெனத் தம்பட்டம் போடுகின்ற
மாந்தர் பிணத்தை வணங்கிலேன்—ஓர்ந்துநீ
உள்ளே யளிக்க வுலகுக் களிக்கின்றேன்
வள்ளாலுன் னன்புவளம் வாழ்க.

உன்னை மறந்திவ் வுலகோர் நரவடிவந்
தன்னை மதமாக்கிச் சாதியாற்—பின்னமுறத்
தேய்ந்தாரத் தீமையினைத் தீர்க்கத் திருவருளால்
ஆய்ந்தான்ம நேயமரு ளாய்.

எனதுன தென்றே யிறுமாக்கும் மாய
மனதினை வென்றமைதி மன்ன—உனதருளே
தாரகமாய் வாழுஞ் சகசான்ம நிட்டையருள்
ஆரமுதே யானந்த மே.

உனக்கன்றோ வெட்கம் உலகிவ்வா றுஞல்
கனக்கப் படைத்ததனைக் காக்க—மனக்கருணை
யில்லையெனுஞ் சொல்லையெளியேனுங்கேட்கவோ
நல்லவழி காட்டாய் நயந்து.

நீயேதாய் தந்தை நிலவுயிர் உன்னன்புச்
சேயேயெனுமுண்மை சீர்பெறவே-நோய்செய்யும்
பொல்லாங்கைப் போக்கிப் புனிதப் புகழோங்கின்
எல்லார்க்கும் பங்குண் டினிது.

எந்தெந்த நன்மை யெனைத்தேடி வந்தாலும்
அந்தந்த நன்மை யளிப்பதுநீ—முந்தென்னை
ஆண்டு நடத்தி யறிவீந்த கற்பகமே
ஈண்டு நடத்தா யினிது.

சூதறியேன் வாதறியேன் சூறையிட்டுத் தூற்றுவோர்
தீதறிந்தும் தீதுரையேன் சேயேனை—ஆதரித்துத்
தெய்வத்தை நம்புந் திறனை விளக்கிடுவாய்
உய்வழியைக் காண வுலகு.

சத்துருக்க ளாவாரும் [1] சத்துருக்க ளாகிடவே
[2] மித்துருக்கள்போகவே மேலான்ம—சத்தியத்தில்
ஓங்க வுலகெல்லாம் யோகவொளி நின்றொளிரத்
தாங்குவரங் களையே தா.

என்செய்வதென்றறியேன் ஏகாந்த மோனத்திற்
பொன்செய்கவிகள்பொழிந்துநிதம்—உன்செயலே
ஆகட்டும் என்றுள் ளடங்கினேன் ; இப்படியே
போகட்டு மோநான் புகல் ?

பாடிப் பதராணுன் பாரிவனை என்றுலகோர்
கோடிக்குறைசொல்லக்கேட்பாயோ—மோடிசெயும்
வீணான வம்பர் விழித்துன்னை நம்பியருள்
பூண வியன்கள் புரி.

வழிவழியாய் வந்திங்கே வாழ்ந்தநற் றொண்டர்
வழிவழியே வந்தேனை வாராய்—செழிமகனே
காக்கின்றேன் என்றபயக் கைகாட்டி யன்புடனே
ஊக்கி நடத்தாய் உவந்து.

1. சத்துரு—சத்தான ஆத்ம சொரூபம்
2. மித்துரு—மித்தையான பொய்யுரு

ஏட்டைப் படிக்கும் இறுமாப்பாற் பேசவிலை
நாட்டைக் கலக்கவுமே நாடவிலை—பாட்டுடனே
உன்பணியைச் செய்ய வுடல்பொரு ளாவியெல்லாம்
அன்பளிப்புச் செய்தேனம் மா.

நகையழிந்தால் வேறு நகைபண்ணிப் போட
வகையுண்டு பொன்வளமைமல்க-தகையழிந்தால்
என்னுண்டு வாழவே யெந்தா யுனதருளிற்
பின்னுண்ட பித்தனெனைப் பேண்.

மொட்டை மலர்முடிக்கு மோதனியே நிற்குமிக்
கட்டைவிரல் மோதிரத்தைக் காணுமோ—நிட்டையிலே
பூந்தொழிந் தோனைப் புகழி யுவப்பாளோ
காந்தொழிலை நீநடத்தாக் கால்.

உண்ணுழி யோகம் உறக்கமும் யோகமே
எண்ணுழி யோகம் இயல்பானேன்—கண்ணுழி
எங்குமுனைக் கண்டேன் இதய வெளியினிலே
பொங்குமுனை யன்பிற் புணர்ந்து.

நான்போனால் முத்தியெனு நன்மா ணவன்பட்ட
ஊன் புண்ணை யெண்ணி யுலகிற்கு—ஞானத்தைப்
போதிக்கவும் அஞ்சிப் புகுந்தேன் மனக்குகையில்
மேதினிக்கு நீயே விளம்பு.

வாழி மதுரகவி வாழிவிவே கானந்தர்
வாழி தயானந்த மாமுனியே—ஊழூழி
தெய்வக் குருமாரின் சீர்பரவுந் தீரர்களை
ஐயநீ இங்கே யனுப்பு.

## 12. மனோஜய மாலை

யுள்ளொடுங்கி ஓங்கார வட்டத்தே
நாளெடுங்கி ஞான மணிவிளக்கின்—மோனமே
ஏகமா யெங்கு மிலகு மகதுரிய
யோகமாய் வாழ்வாயென் னுள்.

சும்மா விருந்தாலிச் சுற்றுலகென் னுகுமென
விம்மாதே யுள்ளே விழித்தடங்கு—நம்மாலே
என்னுகும்? செம்பும் இறைவ னருளிருந்தாற்
பொன்னுகும் ன்றே பொலிந்து!

அஞ்செழுத்தை யோகி யரனைச் சரண்புகுந்து
நெஞ்சழுத்தங்கொண்டு நினைமனமே-மிஞ்சிவரும்
தீப்பகையைச் சுட்டெரிக்குந் தீபத் திருவருளே
பூப்போலப் புன்னகைத்துப் போ.

தில்லிக் கொடிக்கிந்தத் தேசமெல்லாஞ் செல்வாக்காம்
இல்லக் கொடிக்கவ்வா றில்லையே—அல்லலறும்
ஆன்மவொரு மைக்கே யகிலப் புகழுண்டாம்,
பான்மையறிந் துள்ளே பழகு.

வேந்துதலைக் காகிதமும் வெள்ளிவிலையாவதுபோல்
ஏந்தருளாய் ஏற்றமுறும் ஏழையுமே—சாந்தமுடன்
முத்திதரும் சுத்தசக்தி முத்திரையைப்
திதரும் பத்திச் சிறப்பு.

மிக்கரச முத்திரையை மேலே பொறித்தாலே
நிக்கலும் வெள்ளிக்கு நேராகும்—பக்குவமாம்
ஆசான் அருளால் அறிவின் மதிப்போங்கும்
பாசான்மா சேரும் பதி.

பண்டத்தி லேகாணும் பாட்டாளி யின்புலமை
பிண்டத்திற்காணும் பிரமாண்டம்—கண்டுணரும்
சீவனிற் காணும் சிவமே – மலையருவி
தாவிவர மின்சக்தி தான்.

ஆணைப்பெண் ணுக்கி யலிக்கு மகவளிக்கும்
வீணான சித்தி விரும்பாதே—காணுமல்
உள்ளத்தே யுள்ள தனில் உள்ளபடி யுள்ளிருக்கும்
விள்ளரிய சித்தை விரும்பு.

அறிவை யறிவால் அறிவதுவே தூய
நிறைவாம் அதுநீ நினைவாயே—பொறிவாயிற்
செல்லாதே பேர்புகழைத் தேடாதே; வாய்திறந்து
சொல்லாதே சோதி துலக்கு.

சிவனருளே தாரகமாய்ச் செய்வனசெய் நெஞ்சே
அவனருளால் வெற்றி யரும்பும்—சவமான
தேகத்தி லாடுகின்ற சீவன் சிவமயமாம்
யோகத்தைச் செய்வா யுகந்து. 10

குறைபோகா துள்ளே குகையுட் புகுந்தும்
கறைபோகா தாளைக் கழுவிடினும்—பறையாலே
கள்ளன் மிரளான்; கனவிற் புகுந்திடுவான்
உள்ளம் விழித்தொளியில் ஊன்று.

நம்பாதே பொய்யுலகை நானென்று பேசாதே
வம்பாடும் வாயை வளர்க்காதே—அன்பில்லாப்
பாலபிஷே கத்தண்ணீர் பார்த்துலகவஞ்சனையை
வேலவனும் கல்லானன் விண்டு.

ஆலாய்த் தழைத்தே யருகுபோல் வேரோடிப்
பாலாகப் பொங்கும் பதிப்பாட்டு—நாலைந்தும்
ஆன்மாவிற் கூடி யமரநிலை பெற்றிருக்குந்
தான்மா தவமிருக்கத் தான்.

கண்ணாடி வீட்டிற் கடிநாய் புகுந்ததெனத்
தண்ணீர் உருக்கண்டு தாவுங் குரங்கைப்போல்
உண்ணீரில் ஓந்தியென வேயுவட்டும் பேதைபோல்
மண்ணியல் மாந்தர் மனவிகா ரக்கூத்தே.

வெள்ளமிலை யென்னும் வெறுங்குமிழி யொக்குமே
உள்ளபொருளைவெறுப்பார் ஊர்வம்பே-உள்ளே
அருவாம் சிவனருளும் அன்னைமுலைப் பால்போல்
உருவாகும் அன்பர் உளம்.

வெள்ளக் கடலும் விரிநிலமும் வான்மழையும்
விள்ளற் கரிய வியன்சுடரும்—உள்ளத்தே
ஆடும் அருளும் அறிவியலால் ஆகுமோ
கூடுமரு ளுக்குக்கை கூப்பு.

காலைக் கமலம்போற் கட்டவிழு மல்லிகைபோல்
பாலைச் சுரக்கும் பசுவெனவே—மேலருவி
யாழைப்போற் பூங்குழலின் ஏழிசையைப் போலுலகில்
ாழப் பழகுவதே வாழ்வு.

ஆண்டவனே தந்தை; அவன்சேய் உயிருலகே
ஈண்டவுல காலயத்தில் எல்லாரும் பூண்டமனச்
சாட்சிவழி பற்றிச் சமவுரிமை நல்கருளாம்
ஆட்சிவழி பற்றிலினி தாம்.

போகமய மான புவியினிலே சுத்தசக்தி
யோகமயங் காணவுவந்தேன்—வேகவ(
ஊற்றுப் பெருகி யுளங்குளிரப் பச்சைவளம
தோற்றநீ செய்வாய் துணை.

வற்றுப்பா லூற்றை வழங்கிப் பசுநிழலிற்
கற்று சுரக்கக் கனிந்தருளாய்—நற்றுயே
நீதந்த யோக நிலத்தில் அமுதொழுகும்
பாதந்த தீஞ்சுவையைப் பாய்ச்சு. 20

உண்ண வுடுக்க வுவந்துன்னைப் பூசிக்கக்
கண்ணழகு கொஞ்சக் கவிமகிழ—விண்ணழகு
மேவி விளையாட வெற்றித் திருவிளங்கத்
தேவியே நல்காய் செழிப்பு.

அருளாலே எங்கும் அதுவேதா னுகும்
பொருளாக நீயே பொலிவாய்—இருளெல்லாம்
வென்று விழுங்கும் விளக்கேயுன் சோதியினில்
ஒன்றி யிருப்பேன் உவந்து.

**கண்ணின் கனலாற் கருத்துருக்கி, யென்மனதை**
**உண்ணும் ஒருவன் உளத்துள்ளான்—கண்ணன்**
**அவனே முருகன், அவனேயா னந்தன் ;**
**அவனே யகண்டபர னும்!**

சீவ சகபரத்திற் சிக்காவுள் ளானந்த
மேவி யதுநா னெனவிருந்தாற்—சாவதில்லை
எப்போது மான்மாநா னென்றுணர லாம்எளிதாய்;
முப்போதும் இல்லை முரண்.

முரணாக வந்து முளைத்த மனத்தைச்
சரணாகச் செய்துசிவன் றாட்கே—அரணாம்
திருவருளே தாரகமாய்ச் சீவிப்பாய் நெஞ்சே,
கருவினையெல் லாம்அகலக் கண்டு.

உள்ளேபோ நெஞ்சே யுனக்குவெளி வேலையில்லை;
கள்ளப் புலனைக் கலக்காதே—மெள்ளமெள்ள
வந்துன்னைக் கொள்ளைகொளும் வஞ்சக் கலாதியராம்
ஐந்துபேர் தம்மை அடக்கு.

சித்தத் திரையைத் திடமாகத் தாண்டியே
எத்தகைய எண்ணமும் இன்றியே—சுத்தசக்தி
வைத்தபடி நிற்பாய் வளராத்மா னந்தத்தைத்
துய்த்தபடி நெஞ்சே துணிந்து.

வாழ்க குருபரமன், வாழ்க பரமோனம்,
வாழ்கநா னென்னும் மந்திரமே—வாழ்கவே
அன்புண்மை யாக வமர்ந்த சுயஞ்சோதி
இன்பமே யஃதாம் இயல்பு.

எல்லாரும் ஓர்குலமே என்று முரசடித்துப்
பொல்லாதவேற்றுமையைப் போக்குவோம்—தொல்லுலகம்
ஒன்றே, தொடுவானம் ஒன்றே, உயிரான்மா
ஒன்றே, கடவுளும் ஒன்று! 29

சுத்த சக்தி ஓம்